

சேசுவின் இராச்சியம் வரும்படியாக மாதாவின் இராச்சியம் வருக!
- அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்

"நீயாவது எனக்கு ஆறுதலளிக்க முயற்சி எடு."

# மாதா பரிகார மலர்

ஜூலை & ஆகஸ்ட் – 2022
மலர் 43   இதழ் 7 & 8
வருடச் சந்தா ரூ. 150.00
தனிப்பிரதி ரூ.15.00



"ஜெருசலேமின் மகிமை நீயே! இஸ்ராயேலின் மகிழ்வும் நீயே!
எமது ஜனத்தின் பெருமையும் நீயே! ..." யூதித்து 15:10

நமது அன்னை கன்னி மாமரியின் மோட்சாரோபண ஆசீர்
நமக்கும் நமது தேசத்திற்கும் வருவதாக!.

## "தேவதாயுடன் மோட்சத்தில் வாழ்வோம்."

சேசு மரி சூசையில் மிகவும் பிரியமானவர்களே,

வருகின்ற ஆகஸ்ட் 15-ம் தேதி நம் தேவதாய் ஆத்தும சரீரத்துடன் மோட்ச ஆரோபணமானத் திருநாளைக் கொண்டாடுகிறோம். 1950-ம் ஆண்டு நவம்பர் 1-ம் தேதி தேவதாயின் மோட்ச ஆரோபணத்தை விசுவாசச் சத்தியமாக பரி. பாப்பரசர் 12-ம் பத்திநாதர் பிரகடனப்படுத்திய அந்த நாளை நினைவுகூர்ந்து தேவதாய் வழியாக சர்வேசுரனுக்கு நன்றி கூறுவோம்.

சர்வேசுரன் எதற்காக நம்மை இவ்வுலகத்தில் படைத்தார்? நாம் எதற்காக இவ்வுலகில் வாழ்கிறோம்? எங்கே நாம் நித்தியத்திற்கும் அக்களிப்புடன் வாழ சர்வேசுரன் ஆசிக்கிறார்? இந்த மூன்று கேள்விகளுக்கும் நம் தேவதாயின் மோட்ச ஆரோபணத்தில் பதில் உள்ளது.

பரிசுத்த தேவதாய், சர்வேசுரனின் மாசற்ற தாய், இந்த உலகில் ஒப்பற்ற முறையில், உத்தமமான முறையில் சர்வேசுரனை அறிந்து, நேசித்து அவருக்கு ஊழியம் செய்து இந்த மாபெரும் பாக்கியத்தை, அதாவது தனது ஆன்மாவுடனும், சரீரத்துடனும் மோட்ச ஆரோபணம் சென்றார்கள்.

தேவதாயின் பிள்ளைகளாகிய நாமும் தேவதாயின் மாசற்ற புத்தியைக் கொண்டு சர்வேசுரனை அறிந்து, அவர்களின் மாசற்ற இருதயத்தைக் கொண்டு சர்வேசுரனை நேசித்து அவருக்கு ஊழியம் செய்தால் நமக்கும் மோட்ச பாக்கியம் உறுதி. இந்த மோட்ச பாக்கியத்தை அடைய தேவ அன்னையுடன் சேர்ந்து, தினமும் நாமும் பசாசின் தலையை நசுக்க வேண்டும். ஆதியாகமத்தில் கடவுள் கூறியதை நமது வாழ்வில் தினசரி கடைபிடிப்போம்.

"உனக்கும் (பசாசு) ஸ்திரீக்கும் (தேவமாதா); உன் வித்துக்கும், அவளுடைய (தேவதாய்) வித்துக்கும், பகையை உண்டாக்குவோம். அவள் (தேவதாய்) உன் தலையை நசுக்குவாள்." ஆதி 3:15.

உலகம், பசாசு, சரீரம் (கெட்டுப் போன) என்ற இரட்சணியத்துக்கு எதிரான மூன்று எதிரிகளிடம் போரிட்டு நாம் தினமும் பாவத்தை விலக்கும் போது பசாசுடைய தலையை தேவதாயின் உதவியுடன் நாம் நசுக்குகிறோம். இந்த போரில் நிலைத்து வெற்றி பெற்று தேவதாயுடன் மோட்சத்தை அடையும் ஆவலுடன் வாழ்வோம். நம் தாய்நாட்டை தேவதாய் ஆசீர்வதிக்க மன்றாடுவோமாக!

"மோட்ச ஆரோபணமான இராக்கினியே,
எங்களுக்காக வேண்டிக் கொள்ளும்!
இந்திய தேசத்தின் இராக்கினியே,
எங்களுக்காக சேசுவிடம் மன்றாடும்!!"

சேசு மரிய சூசையில் உங்கள் ஆன்ம குரு,
Rev. Fr. **ஜோசப் ராஜதுரை,** SSPX
பாளையங்கோட்டை, தமிழ்நாடு.

# சேசுவின் திரு இரத்தம் நமது இரட்சண்யத்தின் கிரயம் !

**(ஜூலை மாதமானது, நமதாண்டவர் சேசு கிறீஸ்துவின் மகா பரிசுத்த திரு இரத்தத்திற்கு ஒப்புக்கொடுக்கப்பட்ட மாதம். இம்மாதத்தில் குறிப்பாக, சேசுவின் திரு இரத்தம் நம்முடைய இரட்சண்யத்தின் கிரயம் - விலை என்பதையும், அவருடைய திரு இரத்ததினாலன்றி வேறு எதனாலும் நமக்கு இரட்சண்யம் இல்லை என்ற சத்தியத்தையும் தியானித்து, சேசுவின் திரு இரத்தப் பலன்களை நமது ஆத்துமத்தில் நிறைவாய் பெற்றுக் கொள்ள முயல்வோமாக. ஆ.ர்.)**



*இரட்சண்யம் அல்லது இரட்சிக்கப்படுவது என்பது பாவத்திலிருந்தும், நித்திய கேட்டிலிருந்தும் காப்பாற்றப்பட்டு என்றென்றைக்கும் சர்வேசுரனுடைய சந்நிதியிலே இளைப்பாறி, அது வரைக்கும் கண்கள் கண்டிராத, காதுகள் கேட்டிராத, மனம் அனுபவித்திராத பரவச மோட்ச இன்பத்தை அனுபவிப்பதாகும்.*

*இந்த இரட்சண்யத்தை நாம் அடைவதற்கு வானத்தின் கிழோ அல்லது மேலோ "சேசு" என்ற நாமத்தைத் தவிர வேறு நாமம் நமக்கு அருளப்படவில்லை. "சேசு" என்ற நாமத்தின் பொருளே நம்மை "இரட்சிக்கிறவர்" என்பது தான். "அவருக்கு சேசு என்னும் நாமஞ்சூட்டுவீர், ஏனெனில் அவரே தமது ஜனத்தை அவர்களுடைய பாவங்களினின்று இரட்சிப்பார்..." (மத். 1 : 21). பாவத்தைத் தவிர வேறு கொடிய தீமை. செயல் கிடையாது. பாவம் ஒரு ஆத்துமத்தை துன்பத்தில் ஆழ்த்தும், இருளடையச் செய்யும். அதனுடைய சமாதானத்தைக்குலைக்கும். இப்படிப்பட்ட பாவத்திலிருந்து அதன் அடிமைத் தனத்திலிருந்தும் நம்மை மீட்பதற்காகவேதான் சர்வேசுரன் மனிதாவதாரம் எடுத்தார். மனிதாவதாரம் எடுக்காமலே அவரால் இவ்வுலகை இரட்சிக்க முடியும். ஆனாலும் அவருடைய அளவில்லாத ஞானம், நித்தியத்திலிருந்தே இரத்தம் சிந்தாமல் பாவங்களிலிருந்தும் மன்னிப்பு கிடையாது என்று தீர்மானித்திருந்தது. இத்தீர்மானத்தின்படியே, மெய்யான தேவனும், மெய்யான மனிதனுமான வருமான சேசுகிறீஸ்துநாதர் தமது சொந்த இரத்தத்தை நமக்காகச் சிந்த திருவுளமானார். பாவத்தினால் மூட்டப்பட்ட தேவ கோபாக்கினியை தணிக்க வல்லமை பெற்றது சேசுவின் திரு இரத்தம் மட்டுமே. இந்த திவ்விய இரத்தத்தின் பேறுபலன்களைக் குறித்தே "பாதாளத்தில்" அமிழ்ந்து கிடந்த ஆதாமின் மக்களாகிய நம்மைத் தூக்கி எடுத்து பிதாவாகிய சர்வேசுரனுடன் சமாதானமாய் வாழ வழி வகுக்கப்பட்டது.*

*இப்படி நம்முடைய இரட்சிப்புக்காக தன்னுடைய திரு இரத்தத்தைச் சிந்திய சேசு, அவ்விலைமதிப்பில்லாத ஒருதுளி இரத்தத்தைக் கொண்டே கூட மனுக்குலம் முழுவதையும் இரட்சித்திருக்க முடியும். அவர் பிறந்த 8-ம் நாளன்று விருத்தசேதனப்பட்டாரே, அப்போது அவர்*

சிந்திய இரத்தமே போதுமானதாக இருக்கும். ஆனாலும், நமதாண்டவர் நம்மேல் கொண்ட சிநேகத்தின் - தயவின் பிரதிபலிப்பாக கொடியபாடுகளின் மூலமாக தன்னுடைய இரத்தம் அனைத்தையுமே சிந்தச் சித்தமானார். தன் உயிர் சரீரத்தை விட்டுப் பிரிந்த பிறகும் கூட, அவருடைய திருவிலா குத்தித் திறக்கப்பட்டு கடைசி துளி "இரத்தமும், தண்ணீரும் வெளிப்பட்டது" (அரு 19 : 34)

## சேசுவின் திரு இரத்தத்தின் வல்லமை !

நமது இரட்சண்யத்தின் கிரயமாக சிந்தப்பட்ட சேசுவின் திரு இரத்தத்தின் வல்லமையை நாம் அறிந்து கொள்வோம்.

எகிப்து தேசத்தில் அடிமைத்தனத்திலிருந்த யூதர்களை விடுவிப்பதற்காக 10 விதமான ஆக்கினைகளை சர்வேசுரன் அந்நாட்டின் மீது அனுப்பினார். அதிலே இறுதியான ஆக்கினை - எகிப்தியரின் "தலைச்சன் பிள்ளைகள்" கொல்லப்படுவதாகும். எந்தெந்த வீடுகளின் கதவுநிலைகளில் ஆட்டுக்குட்டியின் இரத்தம் தெளிக்கப்பட்டதோ அவ்வீட்டுக் குழந்தைகள் நீங்கலாக மற்ற அனைவருடைய தலைச்சன் குழந்தைகளும் கடவுளின் சம்மனசானவரால் கொல்லப்பட்டனர். இதுபற்றி அர்ச். கிறிஸ்தோஸ்தோம் அருளப்பர் விளக்கிக் கூறும்போது, "சர்வேசுரனுடைய கோபம் அந்த தேசத்தின் மேல் இருந்தது. மரணத்தின் தூதர் அங்குள்ள வீடுகளை வட்டமிட்டபோது, மோயீசன் இஸ்ராயேல் மக்களிடம் தங்கள் பிள்ளைகளைக் காக்க கூறியது என்ன? ஒருவயது ஆன ஆட்டுக்குட்டியைக் கொன்று அதன் இரத்தத்தை வீட்டு வாயிற்கதவில் தெளிக்க வேண்டும் என்று சொன்னார். பகுத்தறிவற்ற ஒரு மிருகத்தின் இரத்தம், பகுத்தறியும் மனிதனைக் காப்பாற்றக் கூடுமோ? ஆம். மோயீசன் சரியாகத்தான் சொல்லுகிறார். அதே ஆட்டுக்குட்டியின் இரத்தம் தன்னிலே அத்தகைய வல்லமையைக் கொண்டிருக்கவில்லை. ஆனால், அது சேசுவின் திரு இரத்தத்தின் முன் அடையாளமாக இருக்கிறபடியால் தான் அதற்கு சாத்தியமாயிற்று. இரத்தம் தெளிக்கப்பட்ட கதவுகளின் வீடுகளை விட்டு மரணத்தின் தூதர் கடந்து சென்றது போல நம்முடைய ஆத்துமத்தின் எதிரிகள், அதனைத் தாக்க வரும்போது ஆத்துமத்தின் மீது சேசுகிறீஸ்துவின் திரு இரத்தம் பொழியப்பட்டதைக் கண்டு அதைக் கடந்து சென்று விடுகின்றன" என்று கூறுகிறார்.

அர்ச். சின்னப்பர் எபிரேயருக்கு எழுதிய நிருபத்தில் சேசுவின் திருஇரத்தத்தை பழைய ஏற்பாட்டின் இரத்தப்பலிகளுடன் ஒப்பிட்டு ". . . வெள்ளாட்டுக் கிடாய்கள், காளைகள் இவைகளின் இரத்தமும். . . மாம்ச அசுத்தத்தை நீக்கி அவைகளைச் சுத்தப்படுத்துமானால் . . . கிறீஸ்துநாதருடைய இரத்தம் எவ்வளவோ அதிகமாய் நம்மைச் சுத்திகரிக்கும் . . . " (எபி. 9 : 13-14) என்று கூறுகிறார்.

இவ்வாறு பழைய ஏற்பாட்டின் இரத்தப்பலி அனைத்துமே புதிய உடன்படிக்கையின் இரத்தமாகிய சேசுவின் திரு இரத்தத்தை முன்குறிப்பவையாகவே உள்ளன. பழைய ஏற்பாட்டில், பலிகளின் இரத்தத்திற்கு சர்வேசுரன் சுத்திகரிப்பு வல்லமையை அருளினாரென்றால் அது, தமது திருக்குமாரனின் திரு இரத்தத்தை முன்னிட்டே !

- மரியாயே வாழ்க.!

# தேவ கோபத்தை அமர்த்தி தேவ இரக்கத்தைப் பொழியச் செய்யும்



# சேசுவின் திருமுகப்பக்தி !

**“சிலுவைப்பாதையில், பக்தியுள்ள வெரோனிக்காள் தேவ சிநேகத்துடன் எனக்குச் செய்த சிநேக முயற்சியையே, நிந்தைப் பரிகார உணர்வுடன் என் திருமுகத்திற்கு மகிமை செலுத்துபவர் அனைவரும் இப்போது எனக்குச் செய்கிறார்கள்.”**

(சேசு சங்.மரியாயின் அர்ச். பீற்றர் சகோதரிக்கு கூறியது)

### சேசுவின் திருமுகத்திற்குப் பரிகாரம்

*சகோதரி மரியாயின் அர்ச். பீற்றர் மூலமாக நமதாண்டவர் வழங்கிய செய்திகளும் எச்சரிக்கைகளும் மற்றும் பரிகாரம் செய்ய வேண்டிய* **பக்தசபை** (Confraternity) *பற்றிய ஆண்டவரின் கோரிக்கைகளும் தூர்ஸ் பேராயர் மிக வந். மோர்வோ* (Msgn. Moriot) *ஆண்டகைக்குத் தெரிவிக்கப்பட்டது.*

*இதற்கிடையில் 1845- அக்டோபர் மாதத் துவக்கத்தில் நமதாண்டவரின் திருமுகத்திற்கு பரிகாரம் பற்றிய இரகசியம் சகோதரி பீற்றருக்கு வெளிப்படுத்தப்பட்டது. இதுபற்றி அவள் எழுதிய கடிதத்தில் :*

*“. . . நான் ஞானவிதமாய்* (Spriritual) *கல்வாரிக்குச் செல்லும் பாதைக்கு எடுத்துச் செல்லப்பட்டேன்.அங்கே நமதாண்டவர் பாரமான கொடிய சிலுவையைச் சுமந்து வருவதையும், தேவ சிநேகம் நிறைந்தவளாக வெரோணிக்கம்மாள் அவரது திருமுகத்தைத் துடைத்ததையும் எனக்குக் காட்டினார்.*

*“. . . அவரது திருமுகம் யூதர்களின் எச்சில் உமிழ்நீராலும், தூசி வியர்வையாலும், காயங்களிலிருந்து வரும் இரத்தத்தாலும் மூடப்பட்டு அலங்கோலமாய்க் காணப்பட்டது. அக்கொடிய வேதனை வேளையில் ஆண்டவரின் திருமுகத்தை அவள் துடைத்து ஆறுதல் தருகிறாள். படைவீரர்களுக்கு அஞ்சாமல் துணிவோடு வந்து அன்போடு ஆண்டவரின் திருமுகத்தை துடைத்த அவளது அன்பு செயலால் ஆறுதல் அடைந்த சேசு அவளை* **கனிவோடு பார்க்கிறார்**. *இதனைக் கண்ட எனக்கு இப்போது - இந்த நவீன காலத்தில் தெய்வீக இரட்சகர் கொடிய தேவதூஷணங்களாலும், அவசங்கை நிந்தைகளாலும், (கல்வாரிப் பாதையில் அனுபவித்த) அதே போன்ற வேதனையாலும் அவதிப்படுவதை உணர்த்தினார். எல்லா தூஷணங்களும் அவரது தெய்வீகத்திற்கு எதிராக இருப்பதையும், யூதர்கள் அன்று அவரது திருமுகத்தைத் துப்பி அவசங்கை செய்த செயலுக்கு இணையாக இருப்பதையும் ஆண்டவர் சுட்டிக் காட்டினார். தூய வெரோணிக்கம்மாளின் ஆர்வத்தையும் அன்பையும் கண்டுபாவிக்கும் படியாகக் கேட்டார். அவள் எதிரிகளின் கூட்டத்திற்கு கொஞ்சமும் பயப்படாமல் திடத்தோடு தைரியமாய் சேசுவை அண்டி போவதைப் போல நானும் இருக்கவேண்டும் என்றும், இதன்*

மூலம் வெரோணிக்காவை எனக்கு மாதிரிகையாக (Model)வும் பாதுகாலியாகவும் கொடுத்தார். அந்த வீரப் பெண் மணியைப் போல அவருக்கு இந்த சேவை (ஊழியம்) செய்ய வேண்டும். அவருக்கு எதிராகச் செய்யப்படும். தூஷணங்கள் நிந்தைகளுக்குப் பரிகாரத்தைச் செய்யும்படி பிறரையும் தூண்ட வேண்டும் என்று விரும்புகிறார்.



இதுபற்றி மேலும் அவள் எழுது கையில் "... சேசுவின் திருமுக பக்தியின் முக்கியத்துவத்தையும், சேசுவின் திரு இருதயத்தோடு அதற்கிருக்கும் தொடர்பையும், அது எந்த அளவிற்கு பரிகாரத்தின் சக்திவாய்ந்த உபாயமாக (கருவி) என்பதை எனக்கு நமதாண்டவர் விளக்கினார். எப்படியெனில் "சேசுவின் திரு இருதயமானது ஆராதனைக்கென்று கொடுக்கப்பட்டதும், பீடத்தின் தேவதிரவிய அனுமானமாகிய திவ்விய நற்கருணையில் அவருடைய அளவற்ற சிநேகத்தினுடைய பிரதிபலிப்பாகவும் இருக்கிறது. அதே போல நமதாண்டவரின் திருமுகமானது, அதனை நிந்திப்பவர்களின் பாவங்களுக்கு பரிகாரம் செய்ய ஆராதனைக் கெனவும் கொடுக்கப் பட்டதும், உணர்வுப் பூர்வமானதும், சேசுவின் தெய்வீகத்தின் வடிவமாகவும் (Figure) பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும், விளக்கமாகவும் திகழ்கிறது. **இந்த ஆராதனைக்குரிய திருமுகத்தை நித்திய பிதாவுக்கு ஒப்புக்கொடுப்பதன் பலனாக, கடவுளின் கோபத்தைத் தணிக்கவும், பாவிகள் மற்றும் தேவ நிந்தனை செய்பவர்களின் மனந்திரும்புதலையும் அடைந்து கொள்ளமுடியும்** என்பதை நமதாண்டவர் எனக்கு உணர்த்தினார். . ." என்று தமது கடிதத்தில் சகோதரி மரியாயின் அர்ச். பீற்றர் குறிப்பிடுகிறாள்.

அன்று, கல்வாரிப் பாதையில் வெரோணிக்கம்மாளின் ஆறுதல் தரும் முயற்சியை ஏற்று எப்படி மனநிறைவோடு அவளைக் **கனிவோடு** பார்த்தாரோ அப்படி இன்று அவரது திருமுகத்திற்கு பரிகார முயற்சிகளைச் செய்பவர்களையும் பார்ப்பதாகக் கூறினார் (காண்க. கடிதம் 1847 - அக்டோபர் 11 )

## "வெரோணிக்காள்களைத் தேடுகிறேன்"

உலகம் மன்னிப்படைய தமது திருமுகத்திற்குப் பரிகார ஆறுதலளிக்கும்படி கேட்ட நமதாண்டவர் "கொஞ்சமான ஆராதிப்பவர்களை மட்டுமே கொண்டுள்ள எனது தெய்வீக முகத்தைத் துடைத்து சங்கை செய்யும் **வெரோணிக்காள்களை நான் தேடுகிறேன்**. . ." என்று கூறிய சேசு யாரெல்லாம் இந்த திருமுகப் பரிகார அலுவலில் ஈடுபடுகிறார்களோ அவர்கள் தூய வெரோணிக்காள்களாக இருக்கிறார்கள் என்று உணர்த்தினார். என்பதைக் குறிப்பிடுகிறாள் சகோதரி மரியாயின் அர்ச். பீற்றர்.

(தொடரும்)

- மரியாயே வாழ்க.!

# மரியாயின் மாசற்ற இருதய பக்தியின் அவசியம் !

**"...உலகில் என் மாசற்ற இருதயப் பக்தியை ஏற்படுத்த சேசு விரும்புகிறார் ..."**

- (ஜூலை 13, 1917, பாத்திமா காட்சியில் தேவதாய் கூறியது)



*இன்று உலகம் எங்கே போய்க் கொண்டிருக்கிறது? 3-ம் உலக மகாயுத்தத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது !! ஆம் ! உலக நாடுகள் தங்களது சமாதானத்தை இழந்து வெகுகாலமாகி விட்டன ! இன்று எந்த ஒரு நாடும் சமாதானம் - அமைதியோடு இல்லை. கொடிய கொரோனா நோய் தொற்று 3-ம், 4-ம் அலைகள் என்று அச்சுறுத்திக் கொண்டிருக்க, பொருளாதார நிலையோ நாடுகளின் எதிர்காலத்தையே கேள்விக் குரியாக்கியுள்ளது !. 100 நாட்களையும் கடந்து ரஷ்யா - உக்ரேன் போர் உக்கிரமடைந்து கொண்டிருக்கிறது. அரசியல் மற்றும் போலி சமய குழப்பங்களால் நாடுகள் சிதைந்து வருகின்றன. எங்கே 3-ம் மகா யுத்தம் வந்து அணு ஆயுதம் போருக்கு வழிவகுக்கப் பட்டு விடுமோ என்ற பேரச்சம் இன்றைய உலகத்தலைவர்களிடையே நிலவி வருவதையும் நாம் காண்கிறோம்.*

*அதைவிட இன்னும் மோசம், சத்திய கத்தோலிக்கத் திருச்சபையின் நிலை !! நாம் சொல்லிக் காட்டவே வேண்டாம். அத்தகைய அவலங்களை நவீன சங்கச் சபை கொண்டிருக்கிறது. விசுவாச தளர்வு - மாறுபாடான போதனைகள் அதனால் ஏற்பட்டுள்ள குழப்பம். கத்தோலிக்க மனப்பான்மை மறைந்து உலகத்தன்மை, விசுவாசிகளிடம் அசமந்தம், இதனால் தேவ கட்டளைகளை எளிதாக புறக்கணித்து மீறும் போக்கு என தீமைகள் எங்கும் வியாபித்து ஆன்மாக்களின் சேதங்களை விளைவித்து வருகின்றன.*

*இத்தகைய சூழ்நிலைகளில் ஒரு பாவப்பட்ட விசுவாசியின் நிலை எப்படியிருக்கும் ? இந்த தீமைகள் அவனை - நம்மை - கறைப்படுத்தாமல் காத்துக் கொள்வது நிச்சயமாக நம்மால் முடியாது. இச்சமயத்தில் அர்ச். பெர்நார்டு கூறியுள்ள வாக்கியத்தை நினைவில் கொள்வோம் :* **"...ஓ மனிதா ... நீ ஆபத்துக்களையும், துன்பங்களையும் சந்திக்கும் போது நட்சத்திரத்தைப் பார்! மரியாயே என்று கூப்பிடு - Respice stellam. voca mariam -!**

*ஆம் !! இதில், இக்காலத்தில் நமக்கு உதவ நம்மீது அன்பும் கனிவும் இரக்கமுமுள்ள நல்ல தேவன் தந்த ஒரே புகழிடம் - அடைக்கலம் :* **மரியாயின் மாசற்ற இருதயமே !**

## சேசுவின் விருப்பம் !

*நாம் அனைவரும், ஏன் இந்த மனுக்குலம் முழுவதுமே கூட மரியாயின் இருதயத்தை புகலிடமாகவும், அடைக்கலமாகவும் கொள்ள வேண்டும். தங்களையே அத்தாயிடம் ஒப்படைக்க வேண்டும்.*

**தமது மாதாவின் மகா பரிசுத்த மாசற்ற இருதயம் உலகமெங்கும் அறியப்பட வேண்டும், உலக மக்களால் நேசிக்கப்பட்டு, மகிமைப்படுத்தப்பட வேண்டும் என்பதே கடவுளின் சித்தம்.**

*இதனையேதான் பாத்திமாவில் தேவதாய் முன்னுரைத்தார்கள். தமது 2-ம் காட்சியில் (1917 ஜூன் 13) தேவதாய், ". . . என்னை மக்கள் அறிந்து நேசிக்கும்படி சேசு உன்னைப் பயன்படுத்த விரும்புகிறார். உலகத்தில் என்மாசற்ற இருதய பக்தியை ஏற்படுத்த சேசு விரும்புகிறார். ." என்றும்,* **ஜூலை 13-ல் நடைபெற்ற மூன்றாம் காட்சியில் நரகத்தைத் திறந்து காண்பித்த தேவதாய்** *"...பரிதாபத்திற்குரிய பாவிகளின் ஆன்மாக்கள் செல்லும் நரகத்தை நீங்கள் கண்டீர்கள், அவர்களைக் காப்பாற்ற உலகில் என் மாசற்ற இருதயத்தின் மீது பக்தியை ஏற்படுத்த கடவுள் விரும்புகிறார் . . ." என்றும் பாத்திமா சிறுவர்களிடம் கூறினார்கள்.*

*மரியாயின் மாசற்ற இருதயத்தின் மீது பக்தி கொள்வதென்றால், அவ்வன்னையை நேசித்து, அவர்களை அங்கீகரித்து (தங்களது தாயாகவும், இராக்கினியாகவும்) மகிமைப்படுத்துவதும் : அவர்களது மாசற்ற இருதயத்திற்கு எதிராகச் செய்யப்படும். துரோகங்களுக்குப் பரிகாரம் செய்வதுமாகும்.*

## மரியாயின் மாசற்ற இருதயப்பக்தி ஏன்?

*17-ம் நூற்றாண்டில் பரலேமோனியாவில் தமது திரு இருதயத்தை அர்ச். மார்க்கரீத் மரியம்மாளிடம் வெளிப்படுத்தி, பரிகாரம் கேட்ட சேசு, இப்போது, "மரியாயின் யுகம்" என்று அழைக்கப்படும் இந்த பிந்திய காலத்தில் தமது தாயின் மாசற்ற இருதயத்தைத் துலங்கச் செய்கிறார். அவ்விருதயத்திற்கு நிந்தைப் பரிகாரம் செய்யக் கேட்கிறார். இது ஏன் என்று கேட்போமானால், நமது பதில் :* **அது சர்வேசுரனின் சித்தம்** *என்பதே. ஆனாலும் நாம் சற்று பக்தியுடன் சிந்தித்தால், மாதாவின் தகுதி நமக்குப் புலப்படும்.*

*சர்வ வல்லபக் கடவுள் தமது மீட்பின் வரங்களையும், பலன்களையும் தம் மாதாவிடமே ஒப்படைத்துள்ளார். இதனைத்தான் அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட், "பிதாவாகிய கடவுள் எல்லா நீர்நிலைகளையும் ஒன்றாய்ச் சேர்த்து அதைக் கடல் என அழைத்தார். அதே கடவுள் தம் வரப்பிரசாதங்கள் யாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து "மரியே" என்று அழைத்தார். இம்மாபெரும் கடவுளிடம் ஒரு திரவியசாலை (பொக்கிஷம்) உள்ளது. தம் சொந்தக் குமாரனையே கடவுள் அதனுள் வைத்துள்ளார். இம்மாபெரும் திரவியசாலை "மாமரி" தான் என்று கூறுகிறார். (மரி. மீது. உண்.பக்தி எண் 23 காண்க). இவ்வாறு கடவுளின் வரங்கள் அனைத்தையும் தன்னகத்தே கொண்ட*

*தேவமாதா அவற்றைத் "தான் விரும்புகிறவர்களுக்கு, விரும்புகிற அளவு வழங்குகிறார்கள்" (அர்ச். சியென்னா பெர்னார்டின்).* இன்னும் மிகத் தெளிவாகவும், ஆணித்தரமாகவும் அர்ச். அல்போன்ஸ் மரிய லிகோரியார், "சேசுவை நமக்குக் கொடுத்த கடவுள் அவருடைய பேறுபலன்களால் மனிதர்களுக்கு இதுவரை கொடுக்கப்பட்டதும் இப்பொழுது கொடுக்கப்பட்டு வருகிறதும், இனி உலகம் முடியுமட்டும் கொடுக்கப்படபோகிறதுமான அனைத்து வரப்பிரசாதங்களும், வரங்களும் மரியாயின் கரங்களாலும், அவர்களுடைய மன்றாட்டுச் சலுகையாலும் மட்டுமே கொடுக்கப்பட வேண்டுமென்று சித்தங் கொண்டுள்ளார்." *(காண்க : மரியாயின் மகிமைகள் அத். 5)* என்று கூறுகிறார். இதையே தான் தாய் திருச்சபையும் போதித்து வருகிறது. எவ்வளவுகென்றால் பாப்பரசர் 7-ம் பத்திநாதர் முதன்முதலாக மாதாவுக்கு **"சகல வரப்பிரசாதங்களுக்கும் மத்தியஸ்தி"** என்ற பட்டத்தை வழங்கியுள்ளார். இதே கருத்தைத்தான் பாத்திமா காட்சி பெற்ற அர்ச். ஜஸிந்தா தான் நோயுற்றிருந்த போது லூசியாவிடம். . . "லூசியா, கடவுள் மரியாயின் மாசற்ற இருதயத்தின் வழியாகவே எல்லோருக்கும் வரப்பிரசாதங்களைக் கொடுக்கிறார் என்று நீ எல்லோரிடமும் சொல் . . ." *(பாத்திமா காட்சிகள் பக் : 191 )* என்று கூறியுள்ளாள்.

## மாதாவிடம் செல்வோம் !

நம்மைக் காக்க கடவுள் தந்த வல்லமையுள்ள மாதாவிடம் செல்வோம். உலகத் தீமைகள், பாவங்கள் நம்மை மூழ்கடித்து நரக நெருப்பிற்குக் கொண்டு செல்லாமல் நாமும், நமது மக்களும் காப்பாற்றப்பட, தேவதாயின் மாசற்ற இருதயத்திடம் அடைக்கலமாவோமாக. அவர்கள் நமது அரணாக இருந்து நம்மைக் காத்து மோட்ச பாதைக்குக் கொண்டு வருவார்கள். பாத்திமா காட்சி பெற்ற சகோதரி லூசியா சங் ஃபுவெந்தெஸ் என்ற குருவானவருக்கு வழங்கிய பேட்டியில் ". . . நம் மிகப்பரிசுத்த மாதாவின் மாசற்ற இருதயமே ஞானத்திற்கு இருப்பிடம், நன்மைத்தனத்திற்கும், மன்னிப்பிற்கும் உறைவிடம். நாம் மோட்சம் செல்லும் வாசல்" என்று கூறியவள், **"உலகைக் காக்கும்" கடைசி சாதனமாக (உபாயமாக) சர்வேசுரன் தமது தாயைத் தருகிறார். ஏனெனில் இந்தக் கடைசி உதவியையும் நாம் மறுத்து விட்டால், நமக்கு மோட்சத்திலிருந்து எந்த மன்னிப்பும் கிடைக்காது. . ."** *(காண்க : Fatima in Twilight - Mark Fellow PP.146)* என்று எச்சரித்துள்ளாள்.

ஆகவே, மாதாவின் உரிமையுள்ள மக்களாகிய நாமாவது நமது வல்லமையுள்ள அன்னையின் மாசற்ற இருதயத்தை அண்டிப் போவோமாக. அவர்களது தாய்மையுள்ள அடைக்கலத்தில் நம்மை வைப்போம். அவர்களை நேசித்து, அந்தத் தாயின் மாசற்ற இருதயத்திறகு எதிராகச் செய்யப்படுகிற நிந்தைகளுக்குப் பாவ பரிகாரம் செய்வோம். முதல் சனி பக்தியை அன்புடனும் பிரமாணிக்கத்துடனும் அனுசரித்து நமக்கும் உலகிற்கும் மீட்பின் வரப்பிரசாதத்தைக் கொண்டு வருவோமாக.

**அர்ச். மரியாயின் மாசற்ற இருதயமே,**
**எங்களுடைய இரட்சண்யமாயிரும் !**

- மரியாயே வாழ்க.!

புதிய வரலாற்றுத் தொடர் !

# "தென்னகத்தின் அரிய முத்து - வேதசாட்சி, அர்ச் தேவசகாயம் பிள்ளை"

- எழுதுபவர் : பி.பிரான்சிஸ் குமார்

## இந்தியாவின் அர்ச்சிஷ்டப்பட்டம் பெற்ற முதல் பொதுநிலையினரான வேதசாட்சி அர்ச். தேவசகாயம் பிள்ளையின் வாழ்க்கைத் தொடர் !



### முகவுரை

அது 1752 - ம் ஆண்டு ஜனவரி மாதம் 15 அல்லது 16-ம் நாளாக இருக்கும். வணிகத்துக்காக மங்கம்மாள் சாலையில், தங்களது மாட்டு வண்டியில் சில வியாபாரிகள் பயணித்துக் கொண்டிருந்தார்கள். அந்த காலை பொழுது வேளையில் ஜல், ஜல்லென்று ஒலித்து கொண்டிருந்த மாடுகளின் கழுத்துப்பட்டியில் மாட்டப்பட்டிருந்த மணிகள், அவைகளின் கால்களின் குளம்பொலி சத்தத்துக் சுதி சேர்த்துக் கொண்டிருந்தன. பெரும் வணிக எதிர்ப்பார்ப்புகளுடன் உற்சாகத்தோடு வண்டியில் அமர்ந்திருந்த வியாபாரிகளின் முகங்களை அந்த இளம் காலை வெயில்பட்டு



பிரகாசமடையச் செய்திருந்தது. உற்சாகத்துடன் துள்ளல் நடையோடு வண்டியை இழுத்து வந்த மாடுகள், வண்டி ஆரல்வாய் மொழி காற்றாடி மலையை நெருங்கியபோது செல்லமறுத்து சாலை ஒரத்தின் புதர்களுக்கருகே நின்று விட்டன.! இதுவரை அவைகளிடமிருந்த உற்சாகமும் ஆராவாரமும் சற்றென மறைந்து போக, கண்களில் ஒருவித மிரட்சி - பயம் தோன்ற அப்படியே அசையாது நின்று விட்டன!!. ஆஹா ! எந்தவிதமான அசம்பாவிதமும் நிகழாமல் வந்த வண்டி மாடுகள் ஏன்? இப்படி மிரண்டுபோய் சிலைகளாக நிற்கின்றன?!...! ஒன்றும் விளங்கவில்லையே !! என்று கலவரமடைந்த வணிகர்கள் என்ன எதென்று அறிய வண்டியை விட்டு கீழே இறங்கி சுற்றிலும் பார்த்து அச்சமூட்டுபவை ஏதாவது இருக்கிறதா? என்று ஆராய்ந்தவர்கள். திடுக்கிட்டுப் போனார்கள். அங்கே . . .! அந்த முட்புதர்களின் ஊடே கிடப்பது என்ன? ஐயோ ! அது ஒரு மனிதரின் உயிரற்ற உடல் ! உடம்பெல்லாம் அடிப்பட்டக் காயங்களோடு இரத்த வெள்ளத்தில் இறந்து போன ஒரு மனிதனின் உடல் ! ! . . .

இப்போது, வியாபாரிகளிடம் அச்சமும் - பயமும் தொற்றிக் கொள்ள மெல்ல அருகில் சென்று கவனித்ததில் சுமார் 40-45 வயதேயிருக்கும். அந்த மனிதனின் கழுத்தில் சிலுவைக் கயிறு தொங்கிக் கொண்டிருந்தது. ஆஹா ! இவர் **ஒரு கிறீஸ்தவர்** அல்லவா? என்று

முடிவுக் கட்டினர். அந்த உடல் துப்பாக்கி குண்டுகளால் துளைக்கப்பட்டு இரத்தம் சிந்தப்பட்டு, அந்த முட்புதர்களையும் நனைத்து, உடலில் காய்ந்து விட்டிருந்ததையும் கண்டு உள்ளம் துடுக்குற்றனர். யாரோ துப்பாக்கியால் அவரைச் சுட்டு உடலை காட்டுப் பகுதி முட்புதர்களில் வீசியிருக்கவேண்டும் ! அதோடு, மாடுகள் பாதையை விட்டு விலகி, அந்த இடத்துக்கு தானாகவே வண்டியை இழுத்துச் சென்றதால் அவர் **ஒரு புண்ணியவானாக** இருக்கவேண்டும் என்ற எண்ணமும் தோன்ற இப்போது அவர்களது மனதில் மரியாதையும், ஒருவித பக்திஉணர்வும் தொற்றிக் கொள்ள, அந்த உடலை கவனமாக மரியாதையுடன் வண்டியில் ஏற்றினார்கள். என்ன ஆச்சர்யம் ! உடல் வண்டியில் ஏற்றப்பட்டவுடன் இதுவரை பயந்து மிரண்டுபோயிருந்த வண்டி மாடுகள் அமைதியாக அசைந்து, தொடர்ந்து பயணிக்கத் தயாராயின ! அவர் கொல்லப்பட்டு இரண்டு நாட்களாவது ஆகியிருக்க வேண்டும். ஆனால் ஆச்சரியப்படும் வகையில் அந்த காயங்கள் நிறைந்து இரத்தக்கரை படிந்த அவரின் உடலில் எந்தவிதமான துர்நாற்றமோ, அழுகளோ இல்லாதிருந்தது !.

நேரே கோட்டாறு ஆலயத்திற்குச் சென்ற வியாபாரிகள் அங்குள்ள பங்குத்தந்தை சங். பன்ஸீகர் சுவாமியிடம் உடலை ஒப்படைத்தனர். அவரும் அதனை கோவிலினுள் நல்லடக்கம் செய்தார். அந்தக் கல்லறை - உடல் புதைக்கப் பட்ட இடம் நாகர்கோவில் கோட்டாறு அர்ச். சவேரியார் ஆலயத்தினுள் உள்ளது.

இந்த சுட்டுக் கொல்லப்பட்ட அந்த புண்ணியவான் யார்? அவர்தான் **தேவசகாயம் பிள்ளை!** ஆம்! அஞ்ஞானத்திலிருந்து மெய்ஞானம் பெற்று கிறீஸ்தவராக மனம் மாறி - நீலகண்ட பிள்ளையாக இருந்த அவர் **வாசர் என்ற தேவசகாயமாக** ஞானஸ்நானம் பெற்று, தாம் பெற்றுக் கொண்ட சத்திய கத்தோலிக்க கிறீஸ்தவ விசுவாசத்துக்காக ஆரல்வாய் மொழி காற்றாடி மலைக் காட்டில் அரசனின் ஆணையால் சுட்டுக் கொல்லப்பட்டு **"வேதசாட்சி - தேவ சகாயம் பிள்ளை"** என்று கத்தோலிக்க மக்களால் அன்போடு அழைக்கப்பட்டவர்.

தேவசகாயம் பிள்ளையின் வீரவிசுவாசமிக்க புண்ணிய வாழ்வும், வேதத்துக்காக தன் உயிர் கொடுத்த பிரமாணிக்கத்துக்காகவும் தாயாகிய திருச்சபை தமது விசுவாசமிக்க புதல்வரை **"வேதசாட்சி"** என்று அன்போடு அழைத்து, 15-5-2022 அன்று அவருக்கு **"அர்ச்சிஷ்டவர்"** என்ற வெற்றி மகுடம் சூட்டி, பீட வணக்கத்துக்கு உயர்த்தி மகிழ்கின்றது.

நமது தாய்நாடாம் இந்தியாவில் குறிப்பாக **தென்னகத்தில்** - தமிழ்நாட்டில் - விளைந்த **அரிய முத்தாகிய** இந்த புண்ணியவான் இந்தியாவின் **வேதசாட்சி** என்றும், அர்ச்சிஷ்டப்பட்டம் பெற்ற **முதல் பொது நிலையினர்** என்பது சிறப்புமிக்கது. அவரது வீர வைராக்கிய விசுவாச வாழ்வும் - கிறீஸ்துவுக்காக தன்னுயிரையேத் தந்த துணிவும், இந்த விசுவாச தளர்ச்சியும், அசமந்தமும் நிலவி வரும் இந்த நவீன கம்ப்யூட்டர் இண்டர்நெட் யுகத்தில் கிறீஸ்தவ மக்களாகிய நமக்கு ஒரு **முன் மாதிரிகையாக,** கண்டு பாவிக்கத் தக்கதாக இருக்கும் என்பது நிச்சயம். அதோடு இந்த புதிய அர்ச்சிஷ்டவர் நமக்காக - நமது தாய் நாட்டிற்காக அது கிறீஸ்துவின் ஒளியை பெற்று சிறக்க மன்றாடுவார் என்பதும் உறுதியே ! இந்த கருத்துக்காகவே அர்ச். தேவசகாயம் பிள்ளையின் வாழ்க்கை வரலாற்றை எழுதத் துணிகிறோம். அவரே இதில் நமக்கு உதவுவாராக.

- ஆசிரியர், மாதா பரிகாரமலர்
- மரியாயே வாழ்க.!

# தேவ மாதாவை அறிந்து கொள்வோம்!



"மாதாவை யாரெனக் கண்டுகொள்ள விரும்பினால் அவர்களுடைய குமாரனைப் பாருங்கள். அவரைக் கண்டுணர உங்களால் முடிந்தால் அவருடைய தாயையும் கண்டுணர முடியும். ஏனென்றால் அவருடைய தகுதி பெற்ற தாயாக அவர்கள் இருக்கிறார்கள்." என்று அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட் கூறுகிறார். நாம் ஒருபோதும் மாமரியின் மகிமைகளைக் கண்டு கொள்ளமாட்டோம். அதற்கு மோட்சம் செல்லும் வரை காத்திருந்தே ஆகவேண்டும். ஆகவே "எல்லா நாவும் இங்கு மவுனமாகக் கடவன - Hic Taceat omnis Ligua" என்று கூறி முற்றுப்புள்ளி வைக்கிறார்.

ஆயினும் தேவதாய் நமக்கும் தாயாகக் கொடுக்கப்பட்டுள்ளார்களே ! அந்தத் தாயை பற்றி அறிய ஆசிப்பது புதல்வர்களின் உரிமையல்லவா? இந்த சலுகையினால் நாமும் முயன்று பார்ப்போம். ஆ.ர்.

## ஏழாம் சலுகை

## மாதா இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரனின் பிரியமுள்ள நேசமாயிருக்கும் மகிமை!

**"இஸ்பிரீத்துசாந்து உமதுமேல் எழுந்தருளி வருவார்; உன்னதருடைய வல்லபமானது உமக்கு நிழலிடும். ."** (லூக். 1 : 35)

*கடவுள் தம் அக வெளிப்பாட்டில் மூன்று தனி ஆட்களாக - பிதாவாகவும், சுதனாகவும் இஸ்பிரீத்துசாந்துவாகவும். அடையாளப்பட்டாலும் அவருடைய புறவெளிப்பாட்டில் இம்மூன்று ஆட்களும் ஒருங்கிணைந்த ஒரே கடவுளாகவே செயல்படுகிறார்.*

*பிதா சிருஷ்டித்தாலும் திரியேக கடவுளே சிருஷ்டிக்கிறார்*

*சுதன் இரட்சித்தாலும் திரியேக கடவுளே இரட்சிக்கிறார்*

*இஸ்பிரீத்துசாந்து அர்ச்சித்தாலும் திரியேகக் கடவுளே அர்ச்சிக்கிறார்.*

*சிருஷ்டித்தலும், பாவ மனுக்குலத்தை இரட்சித்தலும், இரட்சிக்கப்பட்ட மனிதனை அர்ச்சித்தலும் கடவுளின் சிறந்த புறவெளிபாட்டுச் செயல்களாகும்.*

*இம்மூன்று செயல்பாட்டிலுமே இறைவன் தம் திருமாதாவாகிய கன்னிமரியாயை துணையாகக் கொண்டார்.*

*"அவர் பூமியின் அஸ்திவாரங்களை நிறுத்திடுகையிலும், அவரோடுதானே சகலத்தையும் சீர்ப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தேன்" (பழ 8:29) என்று பழமொழி ஆகம வாக்கியமும்,*

*"அருள் நிறைந்தவளே வாழ்க! கர்த்தர் உம்முடனே பெண்களுக்குள் ஆசீர்வதிக்கப் பட்டவள் நீரே . . . இஸ்பிரீத்துசாந்து உமது மேல் எழுந்தருளிவருவார். உந்நதருடைய வல்லபமானது உமக்கு நிழலிடும். ஆகையால் உம்மிடத்தில் பிறக்கும் பரிசுத்தர் தேவசுதன் என்னப்படுவார். . . இதோ நான் ஆண்டவருடைய அடிமை உம்முடைய வார்த்தையின்படியே எனக்கு ஆகக்கடவது" (லூக் 1 : 28, 35,38)* என்ற சுவிசேஷ வசனங்களும்,

*"அவர்கள் எல்லோரும் ஸ்திரீகளோடும் சேசுநாதருடைய தாயாராகிய மரியம்மாளோடும் ஒரே மனமாய் ஜெபத்தில் நிலைத்திருக்க . . . அக்கினிமயம் போன்ற பிரிந்த நாவுகள் தோன்றி அவர்களில் ஒவ்வொருவர் மேலும் வந்து தங்கினது" (அப்.நட 1 : 14, ; 2 : 8)* என்ற அப்போஸ்தலர் நடபடியின் வாசகங்களும் கன்னிமாமரியைக் கடவுள் இம்மூன்று அலுவல்களிலும் துணையாக்கிக் கொண்டார் என்பதை எண்பிக்கின்றது.

மேற்கூறிய கடவுளின் மூவலுவல்களிலும் மாதா துணைநிற்கும் வகை இவ்வாறு :

சிருஷ்டிப்பில் பிதாவின் மூத்த குமாரத்தியாகவும்

இரட்சிப்பில் சுதனின் கன்னித்தாயாகவும்

அர்ச்சிப்பில் இஸ்பிரீத்துசாந்துவின் பிரியமுள்ள நேசமாகவும் மாதா இருக்கிறார்கள்.

இம்மூவலுவல்களிலும் கடவுளின் அன்பாக இருக்கிற இஸ்பிரீத்துசாந்து செயல்பட்டார். ஏனெனில் கடவுள் அன்பாகவே இருக்கிறார் (1அரு 4 : 16) ஆயினும் கடவுளின் மனித அவதாரத்திலே பரிசுத்த ஆவியானவர் தேவ மாமரியிடம் சிறப்பாக எழுந்தருளி வந்து அக்கன்னிகையின் மாசற்ற உதரத்தில் சேசுவை உருவாக்கினார்.

அது எவ்வாறு என்பதை வண. ஆகிர்தா மேரி என்ற சகோதரி மாதாவின் ஏவுதல் பெற்று தான் எழுதிய "கடவுளின் திருநகர்" என்ற புத்தகத்தில் கூறுகிறாள். அதாவது கபிரியேல் அதிதூதர் கன்னி மரியாயிடம் மங்கள வார்த்தையைக் கூறியபோது பரிசுத்த ஆவியானவர் அம்மாது சிரோன்மணியின் ஆன்மாவை எந்த மனிதனுக்கும் எட்டாத உந்நததேவ சிநேகத்தால் பற்றி எரியச் செய்தார். இத்தேவ சினேக மிகுதியால் மரியாயின் இருதயம் தாக்கப்பட்டு, தேவகுமாரனின் மானிடத் திருசரீரத்தை உருவாக்குவதற்குத் தேவையான மிகப் புனித இரத்தத்தைக் கொடுத்தது. அவ்வாறு கொடுக்கப்பட்ட முத்துளி இரத்தத்தைக் கொண்டு பரிசுத்த ஆவி அத்தேவகன்னிகையின் மாசற்ற உதரத்தில் சேசுவின் சரீரத்தை உருவாக்கினார். இம்மகா அற்புதச் செயல் "இதோ நான் ஆண்டவருடைய அடிமை. உம்முடைய வார்த்தையின்படியே எனக்கு ஆகக்கடவது" (லூக் 1 : 38) என்று மாதா மிகத் தாழ்ச்சியுடனும் எல்லையற்ற தேவ சிநேகத்துடனும் பிதாவாகிய சர்வேசுரனுக்குப் பதிலளித்த கணத்தில் நிகழ்ந்தது.

**மாதாவின் மாசற்ற இரத்தத்தைக் கொண்டு சேசுவை உருவாக்கும்படி பரிசுத்த ஆவி, அவர்களுடைய ஆத்துமத்தை அளவற்ற தேவ சிநேகத்தால் பற்றியெரியச் செய்ததால், மாதா பரிசுத்த ஆவியின் மிகப் பிரியமுள்ள நேசம் என அழைக்கப்படுகிறார்கள்.**

வார்த்தையானவர் மாம்சமாகிய இத்திரு நிகழ்ச்சியிலிருந்து இனி எக்காலத்துக்கும், நித்தியத்துக்கும் பரிசுத்த ஆவியானவர் மாதாவின் இருதயத்தில் ஏற்றிய தேவ சிநேக அக்கினியைக் குறைக்கமாட்டார். மாதாவின் சிநேகமும் ஒவ்வொரு விநாடியும் வளருமே தவிர குறையாது. ஆகவே மாதா, "**இஸ்பிரீத்துசாந்துவின் பிரிக்க முடியாத மணவாளி**" என்று அர்ச். லூயிஸ் மோன்போர்ட் கூறுகிறார். இதனால்,

*வேத சாஸ்திரியான அர்ச்சிஷ்ட தாமஸ் அக்வினாஸ் என்பவர் : "மரியன்னை தேவனின் ஆலயம். பரிசுத்த ஆவியின் உறைவிடம்: ஏனெனில் அவருடைய அருட்செயல்பாட்டினால் அவர்கள் மனிதாவதாரமான வார்த்தையானவருக்கு மாதாவானார்கள்" (Opusc.8) என்று கூறுகிறார்.*

*பரிசுத்த ஆவியாகிய சர்வேசுரன் இவ்வாறு மாதாவுடன் நீங்கா உறவு கொண்டிருப்பதால், மாதாவின் வழியாயல்லாது அவர் பூவுலகில் எந்தவிதமான அருட்செயலையும் ஆற்றுவதில்லை.*

*ஆதியில் உலகம் முழுவதையும் அன்பால் ஆட்கொண்டிருந்தார் பரிசுத்த ஆவி என்று வேதாகமம் கூறுகிறது. "தேவ ஆவியானவர் தண்ணீரின் மீது அசைவாடிக் கொண்டிருந்தார். . ." (ஆதி 1 : 2) ஆனால், ஆதாமின் பாவத்தால் உலகம் பசாசின் கையில் போய்ச் சேர்ந்தது. அதை மீட்பதற்காக இரண்டாம் ஆளாகிய சுதனைப் பூமிக்குக் கொண்டு வருவதற்காக பரிசுத்த ஆவி முதல்முறையாக மாதாவிடம் இறங்கினார். அதன்பின் சேசு ஞானஸ்நானம் பெற்றபோது காணக்கூடிய புறாவடிவமாய் அவர் மீது வந்து தங்கினார். இறுதியில் இரட்சண்யம் பூர்த்தியடைந்து பெந்தெகோஸ்த் நாளன்று அர்ச்சிப்பின் அலுவல் தொடங்கிய போது, அதே பரிசுத்த ஆவி மீண்டும் மாதா மீதும், அவர்கள் வழியாக அப்போஸ்தலர்கள் மீதும் அக்கினி நாக்கு வடிவமாக வந்திறங்கினார்.*

*இன்றும், இனி உலக முடியுமட்டும் பரிசுத்த ஆவியானவர் இதுவரை செய்தது போலவே தம்முடைய சகல வரப்பிரசாதங்களையும், வரங்களையும் கொடைகளையும் மாதாவின் வழியாவே மனுமக்கள் மீது பொழிவார்.*

*ஏனென்றால், அர்ச்.லூயிஸ் மரிய மோன்போர்ட் உரைப்பது போல் : "ஒரு ஆன்மா எந்த அளவுக்கு மாமரிக்கு இடமளிக்கிறதோ அந்த அளவுக்கு பரிசுத்த ஆவி தன்னை அதற்குக் கொடுக்கின்றார். பரிசுத்த ஆவி ஆன்மாக்களில் பளிச்சிடும் ஆச்சரியங்களை இக்காலத்தில் செய்யவில்லையென்றால், அதற்கு முக்கிய காரணங்களில் ஒன்று : அவருடைய உண்மையுள்ள பிரிக்க முடியாத மணவாளியுடன் போதிய ஐக்கியத்தை ஆன்மாக்களில் அவர் காணமுடியவில்லை" (மரி.மீ.உ.பக்தி. 36). என்பதே !*

*ஆகவே,* **பரிசுத்த ஆவியானவரை அடைய விரும்புகிறவர்கள் முதலில் மரியாயை அடைந்து கொள்வது அவசியம் !**

**திவ்விய இஸ்பிரீத்துசாந்துவின் பிரியமுள்ள நேசமே வாழ்க !**

*- மரியாயே வாழ்க.!*

---

# நரக நெருப்பிலிருந்து நம்மைக் காக்க பாத்திமா மாதா கற்றுத் தந்த ஜெபம்

. *பாத்திமாவில் தமது 3வது காட்சியில் (1917, ஜூலை 13) நரகத்தைத் திறந்து காண்பித்த தேவதாய் நாம் அங்கு செல்லாதவாறு ஒரு ஜெபத்தைக் கற்றுத்தந்தார்கள்.*

**"ஓ, என் சேசுவே, எங்களை மன்னியும் நரக நெருப்பிலிருந்து எங்களைக் காப்பாற்றும் எல்லா ஆன்மாக்களையும், விசேஷமாய் யார் அதிகத் தேவையிலிருக்கிறார்களோ அவர்களையும் மோட்சத்துக்கு அழைத்துச் செல்லும்"** *ஜெபமாலையின் ஒவ்வொரு 10 மணிகளின் முடிவில் ஜெபிக்கும் இந்த ஜெபத்தை தினமும் அடிக்கடி பக்தியோடு சொல்வோமாக !*

"அர்ச்.சூசையப்பரின் புனிதத்தை விசுவாசிகள் கண்டுகொள்ளும்போது வெற்றியின் முழக்கம் கேட்கப்படும்"

- அர்ச். இஸோலானிஸ் இசிதோர்

# கன்னிமைக்கும் கற்புக்கும் காவலர் அர்ச். சூசையப்பர்



கன்னிமையின் உருவமான மாதாவை தேவ திருச்சுதனின் தாயாக நித்தியத்திலிருந்தே ஏற்படுத்த சித்தங் கொண்ட சர்வேசுரன் அவர்களை சிறுவயதில் இருந்தே ஜெருசலேம் தேவாலயத்தில் வைத்துப் பாதுகாத்தார்.

நித்திய ஞானமாகிய தேவசுதன் மனிதாவதாரமாகி நம்மோடு வாசமாவதற்குரிய காலம் வந்த போது கடவுள் தேவ மாதாவை அர்ச். சூசையப்பரிடம் ஒப்படைத்தார். தாவீது கோத்திரத்திரத்தைச் சேர்ந்தவரான அர்ச். சூசையப்பரின் கரத்தில் கொடுக்கப்பட்ட கோலை அற்புதமாக பூக்கச்செய்து, அந்த அடையாளத்தினால் அவரே தேவமாதாவின் திருமணவாளன் என்று அனைவரும் உணரச் செய்தார்.

தமது கன்னித்தாயைக் காப்பாற்ற சர்வேசுரன் அவர்களை அர்ச்.சூசையப்பரிடம் ஒப்படைத்தாரென்றால், அவரது கற்பின் மகத்துவம் எப்படிப்பட்டது! எனவே தான் கன்னிமையையும், கற்பையும் காப்பாற்ற விரும்புகிறவர்களை "சூசையிடம் போங்கள்" என்று சத்திய திருச்சபைத் தூண்டுகிறது.

பாவம் மலிந்து தீமைகள் நிறைந்துள்ளது இந்த உலகம். திரைப்படங்களாலும் Internet போன்ற சமூக வலை ஊடகங்களாலும் பாவத்திற்கும் பாவசந்தர்ப்பங்களுக்கும் நாம் இழுக்கப்படு கிறோம். மக்களில் அநேகர் இதில் என்ன தப்பு இருக்கிறது. என்று கேட்கிறார்கள். அந்த அளவிற்கு ஒழுக்க உணர்வு கெட்டு வருகிறது. பாவ உணர்வு மறைந்து வருகிறது.

உலகக் கவர்ச்சியான உடை, அலங்காரம், மேல்பூச்சு, முகம் தலைமுடி ஒப்பனைகளுடன் தங்களை அலங்கரித்துக் கொண்டு வெளியில் செல் பவர்கள் பலரின் சோதனைக்கும் பாவத்திற்கும் காரணமாகிறார்கள். அதிலும் நம் கத்தோலிக்க மக்கள் இப்படிச் செய்கிறது மிகப்பெரிய துர்மாதிரிகையுமாகும்.

நமதாண்டவர் சொன்னபடி ஒரு பெண்ணை இச்சிக்கும்படி அவளை நோக்குகிறவன். அவளோடு விபச்சாரஞ் செய்தாயிற்று (மத்:6:28) என்பது உண்மையாயிருக்கும் போது, தங்கள் நடை, உடை பாவனைகளால் பிறர் தங்களை இச்சிக்கும்படி சந்தர்ப்பம் அளிக்கிறவர்களுக்கும் அது பாவமாகாமல் போக முடியாது.

இக்கொடிய கற்புக்கெதிரான பாவங் களிலும் பாவ சந்தர்ப்பங்களிலுமிருந்தும் நம்மைக் காப்பாற்றக் கூடிய தேவ வல்லமையைப் பெற்றவர் அர்ச். சூசையப்பர் என்பதை திருச்சபை அங்கீகரித்திருக்கிறது. அதனாலேயே "**கன்னிகைகளின் காவலனே**" என்று அவரை வாழ்த்துகிறது. கன்னிமைக்கும் கற்புக்கும் காவலரான அர்ச். சூசையப்பரே, எங்களுக்காக வேண்டிக் கொள்ளும் என்று மன்றாடி அவரிடம் நம்மை ஒப்படைபோமாக !

- மரியாயே வாழ்க.!

# தேவ மாதாவின் மோட்சாரோபணம்



திருச்சபையின் வேதபாரகரான அர்ச். அல்போன்ஸ் மரிய லிகோரியார் எழுதிய "மரியாயின் மகிமைகள்" – The Glories of Mary என்ற அரிய நூலில் தமதன்னையின் மோட்சாரோபணத்தைப் பற்றி அவர் எழுதியுள்ள பகுதியின் தமிழாக்கம் இங்கே தரப்படுகிறது. மாமரியின் விண்ணேற்பு மாதமாம் ஆகஸ்ட் மாதத்தில் சிந்தித்து, தியானித்து அத்தாயை நேசிக்க நமக்கு உதவும் என்பதில் ஐயமில்லை. ஆ.ர்.

*இவ்வுலகில், நம்மோடு, நம் நடுவில் வாழ்ந்த நமது நேசமாதா, நம்மை விட்டு மேலுலகிற்குப் போகிற இந்த நாளிலே (ஆகஸ்ட் 15) மகிழ்வதை விட அழும்படி நம்மை திருச்சபை அழைக்க வேண்டுமென்று தோன்றுகிறது ! இத்தகைய தாயின் பிரசன்னம் மக்களை விட்டு நீங்குவதால் "மகிழ்ச்சி கொள்வதைக் காட்டிலும் அழவேண்டும் போலிருக்கிறது" என்று கூறுகிறார் அர்ச். பெர்நார்டு (*Sermo I de Ans*).*

*ஆனால் இந்நாளைக் கொண்டாடி நாம் அகமகிழ்வோமாக (*Miss-Introit*) என்று திருச்சபை நம்மை அழைக்கிறது. இதுவே நியாயமானது. ஏனென்றால் இத்தாயை நாம் நேசித்தால், நம் ஆறுதலைத் தேடுவதைவிட அவர்களின் மகிமையில் நாம் அதிக மகிழ்ச்சியடைய வேண்டும். ஒரு இராச்சியத்தை சுதந்தரிக்கப் போகிற தன் தாயைப் பற்றி மகிழ்ச்சி கொள்ளாத மகன் உண்டோ? அதற்காக அவளை விட்டுப் பிரிந்திருப்பதை அவன் பொருட்படுத்த மாட்டான். அதுபோல் நாமும் அரசியாக முடிசூட்டப்பட இன்று விண்ணகம் செல்லும் நம் தாயை எண்ணி மட்டில்லாத மகிழ்ச்சி கொள்வோம்.*

## சம்மனசுக்களின் மன்றாட்டு

*நமதாண்டவர் தம் மரணத்தினால் மீட்பின் அலுவலை முடித்தபின், அவரை சம்மனசுக்கள் தங்கள் நாடாகிய மோட்சத்தில் காணவேண்டுமென்று பெருமூச்சுகளுடன் தேடினார்கள். ஆகவே அவர்கள் இடைவிடாமல் தாவீதின் சங்கீத வாக்கியத்தைச் சொல்லி மன்றாடினார்கள். "ஆண்டவரே ! எழுந்தருளி வாரும். உமது பரிசுத்தம் விளங்கும் பேழையுடன் உமது இளைப்பாற்றியின் ஸ்தலத்திற்கு வாரும்" (சங் 81:8) என்று வேண்டிக் கொண்டார்கள். சம்மனசுக்களின் இந்த மன்றாட்டு எப்படி இருந்ததென்றால் : ஆண்டவரே ! மானிடர்களை இரட்சித்து விட்டீர். இப்பொழுது எங்களுடன் உமது இராச்சியத்தில் நீர் வந்து வாழ வேண்டும். வரும்போது உம்முடைய திருமாதாவாகிய பேழையுடன் வர வேண்டும். அவர்களுடைய கன்னியுதரத்தில் நீர் வாசம் செய்ததால் அவர்களிடம் உமது பரிசுத்தம் விளங்கும்படி செய்தீரே! இவ்வாறு தேவதூதர்கள் அனைவரும் ஓயாமல் பிரார்த்தித்தனர்.*

*மோட்ச சம்மனசுக்கள் மன்றாடியதை அர்ச். பெர்னார்டின் என்பவர் இவ்வாறு கூறுகிறார் : "ஆண்டவரே, உம்மைத் தன் உதரத்தில் கர்ப்பந்தரித்ததால் அர்ச்சிக்கப்பட்ட உமது அன்னையும் உம்முடன் இங்கு வர வேண்டும்" என்று விண்ணப்பத்தார்களாம் (*serm. de. ansum*) தேவதூதர்களின் மன்றாட்டுக்கு இணங்கிய ஆண்டவர் மாதாவை மோட்சத்திற்கு ஆத்துக் சரீரத்தோடு அழைத்துச் சென்றார்.*

## மகிமையோடும், மகத்துவத்தோடும் !

என்ன மகிமையோடும் எத்தகைய மகத்துவத்தோடும் மாதாவை சேசு மோட்சத்திற்கு அழைத்துச் சென்றார்? **"தாவீது இராஜாவும் இஸ்ராயேல் குடும்பத்தார் அனைவரும் கர்த்தருடைய உடன்படிக்கைப் பேழையை கெம்பீர ஆனந்தத்தோடும் எக்காளத் தொனியோடும் கொண்டு வந்தார்கள்"** (II அர 6 : 15) என்றால் உண்மையான புதிய உடன்படிக்கையின் திருப்பேழையான தேவ மாமரியை அதைவிட எவ்வளவு மேலான சீருடனும் சிறப்புடனும் தேவன் தம் இராச்சியத்திற்குக் கொண்டு சென்றிருப்பார்?

மடாதிபதியான ரூபர்ட் என்பவர் சொல்கிறார் : **"எலியாஸ் தீர்க்கதரிசி அக்கினி மயமான இரதத்தில் ஏந்திச் செல்லப்பட்டார் என்பதை விரிவுரை செய்தவர்கள், அந்த இரதம் தேவதூதர்களின் கூட்டம் என்று கூறுகிறார்கள். ஆனால், ஓ தேவ அன்னையே ! உங்களை மோட்சத்திற்குக் கூட்டிச் செல்ல பரலோகத்தின் அரசரே தனது தூதர் அனைவருடனும் வந்தல்லவா உங்களை அழைத்துச் சென்றார்"** என்று வியந்து கூறியுள்ளார் (In cant. 1 : 5) இதே கருத்தை அர்ச். சியென்னா பெர்னார்டினும் குறிப்பிட்டுள்ளார். மரியாயின் வெற்றியைக் கொண்டாடி மகிமைப்படுத்தும்படியாக சேசு கிறீஸ்துவே மோட்சத்திலிருந்து இறங்கி வந்து மாதாவை எதிர் கொண்டழைத்து உடன் கொண்டு சென்றார் என்று அவர் கூறியிருக்கிறார்.

மாதாவுக்கு முன்னதாகவே சேசு ஏன் விண்ணகம் சென்றாரென்றால், அங்கே தம் தாய்க்கு ஒரு அரியாசனம் அமைக்க மட்டுமல்ல, அவர்கள் மோட்சத்திற்கு வரும்போது, அவர்களுடன் தானும் தேவதூதர்களுடன் எதிர்கொண்டு செல்ல வேண்டும் என்பதற்காகவே என அர்ச். அம்புரோஸ் உரைக்கிறார். (de ExS Virg c 8).

அர்ச். தமியான் இராயப்பர், மரியாயின் மோட்சாரோபணமானது கிறீஸ்துநாதரின் ஆரோகணத்தை விட ஒரு வகையில் அதிக மகிமையுள்ளதாயிருந்தது. ஏனென்றால், நமதாண்டவர் மோட்சம் சென்றபோது சம்மனசுக்கள் மட்டுமே அவரை எதிர்கொண்டழைக்க வந்தார்கள். ஆனால் மாதா மோட்சம் சென்ற போது எல்லா சம்மனசுக்களும் எல்லாப் புனிதர்களும் நமதாண்டவருமே அவர்களை எதிர்கொண்டு வந்தார்கள் என்று கூறுகிறார்.

இதனால், மடாதிபதியான குயெரிக் என்பவர் இவ்வாறு, நமதாண்டவரின் வாய்மொழியாக **"என் பிதாவின் மகிமைக்காக நான் பூலோகத்திற்கு இறங்கி வந்தேன். என் தாயின் மகிமைக்காக மீண்டும் பரலோகத்திற்கு சென்றேன்"** என்று உரைக்கிறார். அதாவது, மாதா மோட்சம் செல்லும்போது அவர்களைச் சந்தித்து அவர்களுடன் போகும்படியாக சேசு மோட்சத்திற்கு சென்றுள்ளார்.

## மாதாவின் மோட்ச ஆரோபணம் !

இனி, நாம் மாதாவின் மோட்ச ஆரோபணத்தை நம் உள்ளக்கண்களால் காண்போம்.

நம் நேச இரட்சகர் தம் தாயை சந்தித்து அவர்களை அழைத்துச் செல்ல மோட்சத்திலிருந்து வருகிறார். அன்னையைக் கண்டவுடன் அளவில்லாத அன்புடன், **"என் நேசமே ! என் புறாவே ! என் அழகுடையவளே ! துரிதமாய் எழுந்து வா. இதோ குளிர்காலம் முடிந்தது"** (உந். சங் : 2 : 10) என்கிறார். அம்மா ! அழகிய புனித புறாவுக்கு நிகரான என் தாயே ! என் நிமித்தம் எத்தனையோ வேதனைகளை நீங்கள் அனுபவித்த இந்த கண்ணீர்க் கணவாயை விட்டு வாருங்கள். **"லீபானினின்று**

மகுடாபிஷேகம் செய்யப்பட" (உந்.சங். 4 : 8) வாருங்கள் என்று அழைக்கிறார். ஆத்துமத்தோடும் சரீரத்தோடும் வந்து உங்கள் புனித வாழ்வின் வெகுமானத்தை அடையுங்கள். உலகில் நீங்கள் அதிகம் துன்பப்பட்டீர்கள் ஆனால் உங்களுக்கு நான் தாயாரித்துள்ள மகிமை அதைவிட அதிகமாயிருக்கிறது வாருங்கள். என் பக்கம் அமருங்கள். சகல உலகங்களுக்கும் இராக்கினியாக உங்களுக்கு நான் சூட்டும் மணிமுடியைப் பெற்றுக் கொள்ளுங்கள் ! என்கிறார்.

அதோ நம் அன்புள்ள மாதா பூமியை விட்டு மேலே எழும்புகிறார்கள். இப்பூமியிலே சர்வேசுரனிடத்திலிருந்து தான் அடைந்த அத்தனை வரங்களையும், வரப்பிரசாதங்களையும் எல்லையில்லா நன்றியுடன் நினைவு கூர்கிறார்கள். தன்னுடைய எளிய பிள்ளைகளையெல்லாம் உலகத்தில் இத்துயர நாட்டில் - விட்டுச் செய்வதில் அவர்களுடைய தாயன்பு பொங்கி பெருகி உருகுகிறது. சேசு தம் கரத்தை நீட்டி தாயை வரவேற்கிறார். மாதா ஆகாயத்தில் மேகங்களுக்கு மேலே வான மண்டலங்களைக் கடந்து செல்கிறார்கள். எல்லையற்ற தூரம் ஒரு இமைப்பொழுதில் கடந்து போகிறது. இதோ மோட்ச வாசல்கள் காணப்படுகின்றன.

ஒரு சக்கரவர்த்தி தம் சாம்ராஜ்யத்தைக் கைக்கொள்ள வரும்போது தலை நகரத்தின் வாசற்கதவுகள் திறக்கப்படுவதில்லை. அவைகள் அகற்றப்படுகின்றன அல்லது மேலே உயர்த்தப்படுகின்றன. ஆகவே சேசு கிறீஸ்து ஜெயசீலராய் மோட்சம் சென்ற போது சம்மனசுக்கள் இவ்வாறு பாடினார்கள். "வாசல்களே! உங்கள் கதவுகளை உயர்த்துங்கள். நித்திய வாயில்களே உயர்ந்து நில்லுங்கள் மகிமையின் அரசர் உட்புகுவார்." (சங். 23 : 7) என்று. அதே போன்று இப்பொழுது, சர்வ உலக இராக்கினியாகிய மாமரி தன் சாம்ராஜ்யத்தைக் கைக்கொள்ள வருகிற இந்நேரத்திலும் அவ்வரசியைப் புடைசூழ வரும் கணக்கில்லா தூதர்கள் உள்ளேயிருக்கும் வானவர்களிடம் "ஓ வான இளவர்களே ! உங்கள் கதவுகளை உயர்த்துங்கள். நித்திய வாயில்களே எழுந்து நில்லுங்கள். மகிமையின் இராக்கினி உட்புகவே" என்று ஆர்ப்பரிக்கிறார்கள்.

## மோட்ச பிரவேசம் !

மோட்ச கபாடங்கள் அகலுகின்றன. மாமரி ஆத்தும சரீரத்தோடு நித்திய ஆனந்தத்திற்குள் நுழைகின்றார்கள். பரலோகத்தில் இருக்கிற கணக்கற்ற தூதர்கள் பூமியிலிருந்து மாதாவைத் தொடர்ந்து சென்ற சம்மனசுக்களைப் பார்த்து "மகிழ்ச்சிகள் நிறைந்து பொங்க, தன் நேசரின் மேல் ஊன்றிக் கொண்டு வனாந்திரத்திலிருந்து வரும் இவள் யார்?" (உந். சங். 8 : 15) என்று வினாவுகிறார்கள். பூமியாகிய வனாந்திரத்திலிருந்து - முட்களையும் புதர்களையும் முளைப்பிக்கிற மண்ணுலகிலிருந்து - வருகிற இத்தகைய அழகுள்ள சிருஷ்டி யார்? ! பரலோக பூலோக ஆண்டவர் மீதே சாய்ந்து, அதற்கேற்ற அரிய வரங்களைப் பூண்டு, அவளுடைய மகிமையை மேலும் மகிமையாக்கும்படி தேவகுமாரனே அவளை எதிர்கொண்டழைத்து வரக்கூடிய அளவிற்கு பேறுபலன் பெற்ற இவள் யார்? என்று ஆச்சரியத்தோடு கேட்கிறார்கள்.

பூமியிலிருந்து செல்லும் தூதர்கள் அதற்கு பதில் சொல்கிறார்கள் :

இவள் நம் அரசரின் தாய். நம்முடைய இராக்கினி. பெண்கள் அனைவருக்குள்ளும் ஆசீர்வதிக்கப்பெற்றவள். அருளால் நிறைந்தவள். அர்ச்சிஷ்டவர்களுக்கு அருமையானவள். அமலோற்பவமாக இருப்பவள். புனித புறா, சகல சிருஷ்டிகளிலும் சௌந்தரியமானவள். .

இவைகளைக் கேட்டதும் வானவர்கள் யாவரும் மரியாயை வாழ்த்தி ஆசீர்வதித்துப் போற்றினார்கள். யூதித் ஒசேலேபெர்னசைப் வென்று வெற்றிவாகை சூடி வந்தபோது யூதர்கள்

*அவளை எப்படிப் புகழ்ந்தார்கள் ! ஆனால், அதைவிட ஆயிரம் மடங்கு அதிகமாய் வானதூதர் கணங்கள் அனைத்தும் அதிக மகிழ்ச்சியுடனும் அதிக குதூகலத்துடனும் பாடி :*

**"ஜெருசலேமின் மகிமை நீயே ! இஸ்ராயேலின் மகிழ்வும் நீயே ! எமது ஜனத்தின் பெருமையும் நீயே ! . . "** *(யூதித் 15 : 10) என்று ஆர்ப்பரித்தார்கள்.*

*மாதருட் சிறந்தவளே ! எம் அரசியே ! எங்கள் வான் நாட்டின் மகிமை நீயே ! எங்கள் அனைவரின் பெருமை நீயே ! வருக இராக்கினியே வருக ! ஆசீர்வதிக்கப்பட்ட எம் இறைவனின் தாயே, இதோ உமது இராச்சியம் ! நாங்கள் அனைவரும் உம் அடிமைகள், உமது கட்டளைகளுக்கு, எப்போதும் காத்திருக்கிறோம் என்று கூறி பணிந்தார்கள்.* (The Glories of Mary - St. Alphonsus Liguori - Brooklyn *பதிப்பகம் - பக் 521 - 525)*

*நேயர்களே ! மாதாவின் பிள்ளைகளே மோட்சா ரோபணமான நம் நாயகியான மரியாயின் மகிமையை உரைக்க வல்லவர் யார்? அதே சமயம் இவ்வரசி நம் அன்புள்ள நம் சொந்தத் தாய் என்பதில் மகிழாதவர் யார்?*

**மோட்சாரோபண இராக்கினியே,**
**எங்கள் சர்வேசுரனின் தாயே,**
**எங்களுக்காக வேண்டிக் கொள்ளும் !**

*- மரியாயே வாழ்க.!*

# தேவமாதாவின் மோட்சாரோபணம் பற்றிய திருச்சபையின் விசுவாசப் பிரகடன வாசகங்கள் !



*என்றும் மாற வேதசத்தியங்கள் அடங்கிய திருச்சபையின் விசுவாச கருவூலத்திலிருந்து, தேவதாயின் ஆன்ம, சரீர விண்ணேற்பு என்ற உண்மையை பாப்பரசர் 12-ம் பத்திநாதர் 1950, நவம்பர் முதல் நாளில் அகில திருச்சபைக்கும் விசுவாச சத்தியமாகப் பிரகடனம் செய்தார்.*

*அவர் வெளியிட்ட* **"மிகவும் தயாளமுள்ள தேவன் - Munificentissimus Deus என்ற பிரகடன அறிக்கையில் :**

**"சர்வேசுரனின் அமலோற்பவ தாயும் எப்பொழுதும் பரிசுத்த கன்னிகையுமான மாமரி, தன் இப்பூவுலக வாழ்வை முடித்துக் கொண்டபின் ஆத்துமத்தோடும், சரீரத்தோடும் மோட்ச மகிமைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டார்கள். . . "** *என்று குறிப்பிடுகிறார் !*

*அதாவது , மாதா தன் பூவுலக வாழ்வின் முடிவில் ஆன்ம சரீரத்துடன் மோட்சம் சென்று அங்கே வாழ்கிறார்கள் என்ற உண்மை கடவுளால் வெளிப்படுத்தப்பட்ட சத்தியமாதலால், இனி அது சகல விசுவாசிகளாலும் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். சத்திய திருச்சபையால் தனது தவறாதவரத்தோடு பிரகடனப் படுத்தப்பட்ட வேத சத்தியங்களை எந்தவிதமான தயக்கமுமின்றி ஏற்று விசுவசிப்பது நமது ஆன்ம* **இரட்சண்யத்திற்கு அத்தியாவசியம் என்பதையும்** *அதனை* **மறுப்பது பதிதம்** *என்பதையும் நாம் அறிந்து கொள்வோமாக !*

# தம் மனிதாவதாரத்தில் மரியாயைப் பயன்படுத்த கடவுள் சித்தங்கொண்டார்.



எண் : 17

மரியாயை நாம் "தாய்" என்று அழைக்குமாறு சேசுவே சித்தங்கொண்டார்.

தாய் என்பது யார்? பிறப்பிக்கிறவள் - பிறப்பிக்கும் வல்லமை கொண்டவள்.

பிறப்பிக்கும் வளமை சிருஷ்டிகராகிய கடவுளுக்குரியது. இவ்வளமையைக் கடவுள் உலகிலுள்ள சகல தாய்மார்களுக்கும் ஒரு சிறு அளவு கொடுத்துள்ளார்.

ஆனால், தம் திருக்குமாரத்தியான மாமரிக்கோ தம்முடைய சொந்த குமாரனையே பூவுலகில் பிறப்பிக்கும் முழு வளமையையும் கொடுத்தார்.

தேவ சுதனை மட்டுமல்ல, அவருடன் ஒன்றான அவருடைய ஞான சரீரமாகிய தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் அனைவரையும் பிறப்பிக்கும் மாபெரும் வளமையையும் கொடுத்தார்.

ஒரு சிருஷ்டியால் எந்த அளவுக்குப் பெற்றுக் கொள்ள முடியுமோ அந்த அளவிற்கு மரியாயிக்கு இறைவன் தம் பிறப்பிக்கும் வளமையை அளித்ததாக அர்ச். லூயிஸ் மோன்போர் கூறுகிறார்.

எந்த ஒரு சிருஷ்டியும் அளவுடையதே. மாதாவும் ஒரு சிருஷ்டியாக இருப்பதால் அளவுடையவர்களே.

ஆனால், கொடுக்கிற கடவுள் தம் அளவற்ற வளமையை அளவுள்ள ஒரு சிருஷ்டியின் வழியாக கொடுப்பதால், மாதா, கடவுளின் அளவற்ற வளமையில் பங்கு பெறுகிறார்கள். எந்த சிருஷ்டியும் கொடுக்காத சுயாதீன முழு ஒத்துழைப்பை மாமரி இறைவனுக்குக் கொடுப்பதால், அவருடைய அளவில்லாத வளமை மாமரியிடம் தங்கு தடையின்றிப் பாய்கிறது.

எண் : 18

இந்த அளவற்ற வளமையினால் இரண்டாம் ஆளாகிய சுதனாகிய சர்வேசுரன் பரலோக மோட்சத்தை விட்டு தன் பூவுலக மோட்சத்திற்கு வரும் புதிய ஆதாமாக மரியாயின் கன்னியுதரத்தில் வந்தார் !

உலகிற்சிறந்த அற்புதம் இதுவே!
கடவுள் தன் மகிழ்ச்சியைக் காணும் சிங்காரத் தோப்பு இதுவே!

## இது எவ்வாறு?

1. கடவுள் மறைந்து எழுந்து வந்த பெரும் நிகழ்ச்சி இது.

2. மரியாயின் திரு உதரத்தில் அவர் அடைப்பட்டிருந்து தம் இறைவனுக்குரிய எல்லையற்ற சுயாதீனத்தைக் கண்ட நிகழ்ச்சி இது.

3. உலகத்தைச் சுமப்பவர் ஒரு சிறு மங்கையால் சுமந்து செல்லப்பட தம்மை அனுமதித்து தம் வல்லமையை வெளிப்படுத்திய நிகழ்ச்சி இது.

4. அனைத்து சிருஷ்டிகளிடமிருந்தும் சர்வேசுரனுக்குரிய தம் மாட்சிமைகளை மறைத்து, அவைகளை மாதாவுக்கு மட்டுமே வெளிப்படுத்தியதில் அவரின் மகிமை துலங்கிய நிகழ்ச்சி இது.

சர்வேசுரன் ! எல்லாம் வல்லவர் ! ! அவருடைய சுதந்திர சுயாதீனம் எப்படிப்பட்டது? அவருடைய மகத்துவம் எத்தகையது? இவைகளில் தமது மகிமையை எதிலே கடவுள் அடைந்தாரென்றால், மரியாயின் மகவாக தாம் உற்பவித்து, அக்கன்னிகையின் குழந்தையாகப் பிறந்து, அவர்களால் இறைவனின் ஆலயத்தில் காணிக்கையாக்கப்பட்டு முப்பது வருடம் நசரேத் ஊரில் அத்தாயின் நிழலில் மறைந்த செடியாய் வளர்ந்தாரே அதிலே தான்!

ஆபிரகாம் ஈசாக்கை வாக்குத்தத்தின் புதல்வனாகப் பெற்றார். அவனை நேசித்தார். மகிழ்ந்திருந்தார். ஆயினும் கடவுள் கேட்டதும் முழுச்சம்மதத்துடன் ஈசாக்கைப் பலியிட்டார். ஆபிரகாமின் உள்ளத்திலே அப்பலி நிறைவேறி விட்டது ! ஆனால், மாதா கொடுத்த பலி ! - சேசு செலுத்திய சிலுவைப் பலியை ஒப்புக் கொடுத்தது யார்? பெற்று அமுதூட்டி, உணவு தந்து காப்பாற்றி வளர்த்த தாயே அவரைத் தன் முழு சம்மதத்துடன் நித்திய பிதாவுக்கு ஒப்புக் கொடுத்தார்கள்! தம்முடைய பலி செலுத்தப்பட சேசு மரியாயை எந்த அளவுக்குச் சார்ந்திருந்தார் என்பது இதனால் விளங்குகிறது. சேசு முப்பது வருடம் மாதாவைச் சார்ந்து வாழ்ந்ததில் மகிமை, அவர் உலக முழுவதையும் மனந்திருப்பியிருந்தாலும் கூட பிதாவுக்குக் கிடைத்திராது. என்கிறார் அர்ச். லூயிஸ்! அதுபோலவே, நாமும் அதையும், இதையும் செய்வதைவிட மாமரி அன்னையைச் சார்ந்து வாழ்வதால் கடவுளுக்கு அதிக மகிமையைக் கொடுப்போம் என்று அவர் கூறும் உண்மை நாம் ஆழ்ந்த சிந்தனைக்குரியதாகும்.

- மரியாயே வாழ்க.!

---

# நிறைவேறிய தீர்க்கத்தரிசனம் !

. ஒரு முறை அர்ச். பிரான்சிஸ் ஜெரோம் ஒரு இல்லத்துக்கு வருகை தந்தார். பிறந்து சில நாட்களே ஆகியிருந்த அந்தப் பச்சிளம் குழந்தையை ஆசீர்வதித்தவர், பரவசமானார். பெற்றோர்களை வாழ்த்தியவர், குழந்தையை அன்போடு பார்த்து :

“இந்தக் குழந்தை நீண்ட ஆயுளைக் கொண்டிருப்பான். தமது 90 வயதுக்கு முன்பாக மரணத்தைக் காணமாட்டான். இவர் மேற்றிராணியாராகி, சேசுகிறீஸ்துவுக்காக மிக உந்தமான காரியங்களைச் செய்வார்” என்று கூறினார்.

அதன்படியே அக்குழந்தை 91 வயது வரை வாழ்ந்தது - மேற்றிராணியாராகி, இரட்சகர் துறவற சபையை ஏற்படுத்தி, எண்ணற்ற வேதசாஸ்திர, நல்லொழுக்க பக்தி நூல்களை எழுதி திருச்சபையின் வேதபாரகர் என்று அறிவிக்கப்பட்டார்! யார் அவர்? அவரே, **அர்ச். அல்போன் மரிய லிகோரியார் !**

# வானில் தோன்றிய வெளிச்சம் !

## அர்ச். அல்போன்சம்மாளின் பாக்கியமான மரணம் !




அன்று 1946 ஜூலை 27-ம் நாள். பரணங்ஙானம் பங்குச்சாமியார் சகோதரி அல்போன்சம்மாளைப் பார்க்க வந்தார். கையில் ஜெபமாலையை ஏந்தியவாறு படுத்திருந்த அவளைப் பார்த்து, “சிஸ்டர், என்ன செய்தி !. எப்படி இருக்கிறீர்கள் ?” என்று கேட்டார். அதற்கு அவள் “சுவாமி, நாளைக்கு எனக்கு ஒரு போராட்டம் நடக்கப் போகிறது. நான் அதற்குத் தயாராகிக் கொண்டிருக்கிறேன்” என்று பதிலளித்தாள். குருவானவர், “பலமுறை போராடிப் பழகியிருக்கிறீர்கள் தானே, போருக்கான பழைய கருவிகளை தயாராக வைத்துக் கொள்ளுங்கள்.” என்று நகைச்சுவையாகக் கூறினார். அதற்கு அல்போன்சம்மாளும், “ஆமாம் ! அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன்” என்று தனது ஜெபமாலையை உயர்த்திக் காட்டியவள், “எனக்காக நீங்களும் வேண்டிக்கொள்ளுங்கள். நானும் உங்களுக்காக வேண்டிக் கொள்கிறேன்” என்று பதிலளித்தாள்.

மறுநாள் - 1946 ஜூலை 28, காலையில் அல்போன்சம்மாள் வழக்கம் போல் வராந்தாவில் உட்கார்ந்தவறே ஆலயத்தில் நடக்கும் திவ்யபலி பூசையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சற்று நேரத்தில் நோயின் தாக்குதல் அறிகுறிகள் தோன்றின. மெல்ல எழுந்து தனது அறைக்குள் சென்று படுத்துக் கொண்டாள். உடனே வாந்தியும், மிகக் கடுமையான வேதனையும் ஆரம்பித்தன. சத்தம் கேட்டு உதவிக்கு சகோதரிகள் வர, துன்பங்கள் தொடர்ந்தன. வழக்கமாக இப்படிப்பட்ட வேதனைத் தருணங்களில் எதுவும் பேசவோ, கண்களைத் திறக்கவோ செய்யாத அல்போன்சம்மாள் இன்று கண் திறந்து சுற்றி நின்றவர்களைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள். கொடிய வேதனைகளைத் தாங்கிக் கொண்டிருந்த போதிலும் தங்களைப் பார்த்து அவள் சிரிப்பதைக் கண்ட சகோதரிகளின் கண்கள் நீரால் நிறைந்தன. வேதனை அதிகரிக்கவும் பொறுக்கமாட்டாத அல்போன்சா, “எனக்கு சகிப்பதற்குப் போதிய சக்தி இல்லை. எனக்காக வேண்டிக் கொள்ளுங்கள். இது எனக்கு என் கடவுள் தந்தது தானே? நான் சகித்துக் கொள்ளத் தான் வேண்டும் ! ஆம் ! சகிக்கத் தான் வேண்டும்” என்று கூறியவள், வேதனையால் திக்குமுக்காடிப் போனாள்.

பின்னர், “மணி எத்தனை?” என்று கேட்டாள். நேரம் நண்பகல் 12 ஆகிவிட்டிருந்தது. தன் உடல் மீது போர்வையை இழுத்து மூடிக்கொண்ட அல்போன்சம்மாள், திரும்பவும் வேதனை தாங்க முடியாமல் “என் மாதாவே ! என் தாயே !” என்று சத்தமாகக் கூறியவாறு சுவரில் மாட்டப் பட்டிருந்த வியாகுல மாதாவின் படத்தைத் திரும்பிப் பார்த்தாள். மாதா படத்தைப் பார்த்த அவளது முகத்தில் சாந்தமும், சமாதானமும் நிலவியது. அவளது முகத்தில் அசாதாரணமான அழகும், ஒளியும் காணப்பட சுற்றிலும் நின்றிருந்த சகோதரிகள் வியந்து போயினர் !

இதற்குள் மடத்துப் பெரிய தாயார் அங்கு வந்தார்கள். “மகளே, சமாதானமாய் இரு” என்று சொல்லி பாடுபட்ட சிலுவையை முத்தி செய்யக் கொடுத்தார்கள். சிலுவையை பக்தியோடு முத்தமிட்ட சகோதரி அல்போன்சா, “எனக்குச் சமாதானக் குறைவு எதுவும் இல்லை தாயே” என்று கூறினாள். சிறிது நேரம் சென்றது “எனக்கு உடுப்பு உடுத்துங்கள். நான் போக வேண்டும்” என்றாள். உடுப்பு அணிந்துதானே இருக்கிறீர்கள். எதற்கு உடுப்புக் கேட்கிறீர்கள்? என்றனர் சகோதரிகள் அதற்கு அல்போன்சா, “சபை ஆடையை எனக்குத் தாருங்கள். நான் போகிறேன். என்னை அனுப்பி வையுங்கள்” என்று வேண்டினாள். அவளது நிலையை புரிந்து “குருவானவரை அழைத்து வரட்டுமா?” என்று சகோதரிகள் கேட்க, அதற்கு அல்போன்சா கூறிய பதில் யாருக்கும் புரியவில்லை.

சிறது நேரம் கடந்து **"சேசுமரி சூசை"** என்று கூறி பெருமூச்சு விட்ட அல்போன்சா பக்கத்தில் நின்றிருந்த சகோதரி கபிரியேலைப் பார்த்து, "இதோ என் இதயத்தில் இருந்து வரும் கீதத்தை நீங்கள் கேட்கவில்லையா? அது எவ்வளவு இனிமையான பாடலாக இருக்கிறது ! ! " என்று புன்னகையுடன் கூறியவள், இரு முறை பெருமூச்சு விட்டவாறு கண்களை மூடி அமைதியாக தலை சாய்த்துக் கொண்டாள்.

உடனே பங்கு குருவானவருக்கும், மருத்துவருக்கும் ஆள் அனுப்பினார்கள். இருவரும் ஒரே சமயத்தில் வந்து சேரவே, நாடியை பார்த்து மருத்துவர் சகோதரிக்கு கடைசி அவஸ்தைப்பூசுதல் கொடுக்கும்படி குருவானவரைக் கேட்டுக் கொண்டார். அதன்படி பங்கு சுவாமி அவஸ்தைப்பூசுதல் வழங்கி கடைசி ஆசீர் அளித்தார்.

வழக்கம்போல் மயக்கம் தெளிந்து அல்போன்சம்மாள் கண்களைத் திறப்பாள், தங்களோடு பேசுவாள் என்று சகோதரிகள் காத்திருக்க, அவள் கண்களைத் திறக்கவேயில்லை அவளுக்கு இனி இவ்வுலகக் காட்சிகள் தேவையில்லை. சத்தமின்றி அந்த மாடப்புறா தன் வான் வீட்டிற்குப் பறந்து போய்விட்டிருந்தது. ஆம் ! **சகோதரி அல்போன்சம்மாள் மரணமடைந்து விட்டாள் !** தான் முன்னறிவித்தது போல் பூமியில் தனக்காகக் காத்திருந்த எல்லோர் முன்னிலையிலும், சற்றும் ஓசையின்றி வானவர்களோடு சேர்ந்துவிட்டாள் சகோதரி அல்போன்சா! அவளது ஆன்மா 35 வருடங்கள், 11 மாதங்கள், 9 நாட்களில் தனது வாழ்வின் தேர்வை முடித்துவிட்டு வெற்றிமுடி சூட தன் சிலுவையை சுமந்து கொண்டு சேசு தனக்காக தயார் செய்திருந்த வான்வீட்டை நோக்கிச் சென்று விட்டது.



அப்போது பரணங்ஙானம் பெரிய கோவில் மணி மும்முறை ஒலித்து நின்றது. அது நண்பகல் திரிகாலமணி. தனது சொந்த வீட்டை அடைந்து விட்ட அல்போன்சம்மாளை வானுலகோர் வரவேற்று ஆசனத்தில் அமர்த்திய கீதம்போல் அது அமைந்தது.

## வானத்தில் தோன்றிய வெளிச்சம் !

சிலமணி நேரத்துக்குப்பின் மரித்த சகோதரியின் புனித உடல் துறவற ஆடை அணிவிக்கப்பட்டு மடத்துக் கோவிலில் வைக்கப்பட்டது. சகோதரிகள் அவளது உடலைச் சுற்றி நின்றும், அமர்ந்தும், முழங்காலில் நின்றும் அழுவதும், செபிப்பதுமாய் பகலையும் இரவையும் கழித்தனர்.

அன்று இரவில் அல்போன்சம்மாளின் அறையின் மேல் பாகத்தில் வானில் ஒரு ஒளி தோன்றியது ! ஒரு மணி நேரமாக நின்று நிலை பெற்றிருந்த அந்த ஒளியை சகோதரி செசிலியம்மாள் பார்த்து வியந்தாள். அவளைத் தொடர்ந்து பல சகோதரிகளும் அவ்வொளியைக் கண்டனர். பின்னர் பங்குக் குருவிடம் அச்செய்தி சொல்லப்பட, அவர் சர்வேசுரனுடைய செயல்கள் பல வழிகளில் வரும், மக்களின் நன்மைக்காக கடவுள் அதனைப் புனிதப்படுத்துவார். என்று சொன்னார். ஆம் ! சர்வேசுரன் தமது பிரமாணிக்கமுள்ள ஞானப்பத்தினியை மகிமைப்படுத்தினார். திருச்சபையில் பீட வணக்கத்திற்கு உயர்த்தினார்.

- திருநாள் : ஜூலை 28

**அர்ச். அல்போன்சம்மாளே, எங்களுக்காக வேண்டிக் கொள்ளும் !**

- மரியாயே வாழ்க.!

# <u>தேவ இரகசிய ரோஜா மாதா</u>

**(திருநாள் - ஜூலை 13)**



*1917 - ல் மாதா பாத்திமாவில் காட்சியளித்து, ஜெபமும் தவமும் பரிகாரமும் செய்யும்படி வலியுறுத்தினார்கள். தமது முதல் சனி பரிகாரப் பக்தியை வெளிப்படுத்தி தமக்கு எதிராகச் செய்யப்படும் நிந்தைகளுக்குப் பரிகாரம் செய்யும்படி பரிகாரப் பக்தியைத் தந்தார்கள்.*

*பாத்திமா காட்சிகளின் தொடர்ச்சியாக மாதா 1947-ல் மோன்டிசியாரி என்னுமிடத்தில் பியெரினா என்ற தாதிக்கு* **தேவ இரகசிய ரோஜாவாக** *காட்சியளித்தார்கள். முதல் காட்சியில் தன்னுடைய நெஞ்சினிலே மூன்று வாள்கள் குத்தப்பட்டு, கண்ணீர் சிந்தியவாறு காணப்பட்டார்கள். ஜெபம் - தவம் - பரிகாரம் என்ற வார்த்தைகளைக் கூறினார்கள்.*

*தமது 2வது காட்சியில் மாதா நெஞ்சில் வாள்களுக்குப் பதிலாக வெள்ளை - சிவப்பு - பொன்நிறங்களுடைய ரோஜா மலர்களோடு காட்சியளித்து* **ஜெபம் - தவம் - பரிகாரம்** *செய்யும்படி வலியுறுத்தினார்கள்.*

*இக்காட்சியில் நமதன்னை தேவ ஊழியர்களின் பாவங்களுக்குப்பரிகாரம் செய்யப்பட வேண்டும் என்று கூறினார் ஆண்டுதோறும் ஜூலை 13-ம் நாளை தேவ இரகசிய ரோஜா திருநாளாக கொண்டாடும்படிக் கேட்டார்கள். அதற்கு தயாரிப்பாக ஜூலை 1 முதல் 12-ம் தேதி வரை நவநாள் செய்து 13-ம் தேதியை தேவ இரகசிய ரோஜா மாதா திருநாளாக பரிகார நாளாக அனுசரிக்கும்படிக் கேட்டார்கள்.*

*- மரியாயே வாழ்க.!*

---

# பரிகாரப் பக்தியின் நமது பாதுகாவலி அர்ச். மரிய மதலேனம்மாள்

**(திருநாள் - ஜூலை 22)**

*பாவியாயிருந்து தன் பரிகார அன்பினால் சேசு மாதாவின் ஆறுதலாயிருந்த அர்ச். மரிய மதலேனம்மாளை பரிகாரப் பக்தியில் நமது பாதுகாவலியாகக் கொண்டிருக்கிறோம்.*

*நகரின் அறியப்பட்ட பாவியாயிருந்த அவள் தேவ வரப்பிரசாதத்தால் தொடப்பட்டு, சேசுவின் அன்பினால் பற்றியெரிந்து தமது பாவங்களுக்குப் ஜெபம் - தவம் - பரிகாரம் செய்து சேசுவுக்கு உகந்த பெரிய புனிதையானாள்.*

*அர்ச். மரிய மதலேனம்மாள் நாம் நமது பரிகார அப்போஸ்தலத்துவத்திலும், பக்தியிலும் பிரமாணிக்கமாயிருந்து சேசுவையும், மாதாவையும் நேசிக்க நமக்கு உதவுவாளக !*

*- மரியாயே வாழ்க.!*




# தூக்குமர நிழலிலே!

**(இங்கிலாந்து நாட்டில் புராட்டஸ்டாண்ட் பிரிவினையின் போது கத்தோலிக்க விசுவாசத்துக்காக வேதசாட்சியமடைந்தவர்களின் வரலாறுகள். ஆ.ர்.)**

## 1. அர்ச். ஜாண் ஃபிஷர்

(St. John Fisher)

(1469 - 1535)

### தொங்கவிடப்பட்ட தலை !



அது, 1535-ஜுன் 23-ம் நாள். லண்டன் பிரதான பாலத்தின், டவர் சிறைச்சாலையையொட்டிய பகுதியில் ஒரே கூட்டம். ஆண்களும், பெண்களும், சிறுவருமாக பாதசாரிகளின் கூட்டம் அங்கே குழுமியிருந்ததால் வண்டிகளும், குதிரைகளும் செல்ல முடியாமல் பெரும் போக்குவரத்து நெரிசல் ஏற்பட்டிருந்தது. அந்த மக்களின் முகங்களில் பதட்டம், சோகம் அதோடு வியப்பும் கலந்த உணர்வலைகள் எழும்ப, கூட்டம் அதிகரித்துக் கொண்டு தான் இருந்ததேயொழிய குறைந்த பாடில்லை ! ஏன்? இவ்வளவு கூட்டம் அங்கே?

அந்த லண்டன் மாநகரின் பாலத்தின் ஒரு கம்பத்தில் புதிதாக ஒரு மனித தலை தொங்கவிடப்பட்டிருந்தது!! அது . . . முன்தினம் வேதசாட்சியாகக் கொல்லப்பட்டவருடைய தலை. வெட்டப்பட்டு ஒரு நாளாகியும் இன்னமும் உயிர் உள்ளதைப் போல் சிவந்தும், இரத்தம் கசிந்து கொண்டும் இருந்த அந்த சிரசின் முகத்தில் ஒரு தெய்வீக மலர்ச்சியை சாந்தத்தைக் கண்டு மக்கள் வியந்து போனார்கள்!. அந்த முகம் மெல்ல பிரகாசிப்பதையும் கண்டு அதிசயத்துப் போனார்கள் ! ! அதோடு மட்டுமல்லாமல் வெட்டப்பட்டு, கம்பத்தில் தொங்கவிடப்பட்டு 15 நாட்கள் கடந்தபின்னரும் கூட அந்த சிரசு எந்தவிதமான அழிவோ துர்நாற்றமோ ஏதுமின்றி இன்னமும் இரத்தம் கசிந்தவாறும், ஒளி வீசிக் கொண்டும் இருப்பதையும் கண்டு பிரமித்து போன மக்களின் விசுவாசம் அதிகரிக்க, துக்கம் அனுசரித்து ஜெபிக்கத் துவங்கினர். இந்த அசாதாரண நிகழ்வினைக் கேள்விப்பட்ட அரசன் 8-ம் ஹென்றி அச்ச உணர்வு மேலிட அந்த தலையை தேம்ஸ் நிதியின் ஆழத்தில் வீசியெறியச் செய்தான்.

*அது யாருடைய தலை? ! கத்தோலிக்க வேதத்திற்காக, அரசனுக்குப் பணியாமல் தன் இன்னுயிர் ஈந்த சிறந்த கல்வியாளரும், ராச்செஸ்டர் நகர் மேற்றிராணியாரும், கர்தினாலுமான* **அர்ச். ஜான் ஃபிஷரின்** *சிரசே அது!*

## சிறந்த கல்வியாளர்

*அர்ச். ஜான் ஃபிஷர் 1469-ம் ஆண்டு இங்கிலாந்தின் யார்க்ஷேரின் வெவேர்ஸ் என்ற ஊரில் வணிகரான இராபர்ட் ஃபிஷர், ஆக்னஸ் என்பவர்களின் மகவாகப் பிறந்தார். ஆரம்பக் கல்வியை சொந்த ஊரிலேயே கற்ற அவர் 1484-ல் புகழ்பெற்ற கேம்பிரிட்ஜ் பல்கலைகழகத்தில் சேர்ந்து 1487-ல்* B.B.A. *பட்டமும், 1491-ல்* M.A. *பட்டமும் பெற்றார். சிறந்த அறிவு, ஞானம், புத்திக்கூர்மையும் மிகுந்த அவர் தமது 22வது வயதில் விசேஷ உத்தரவு பெற்று குருப்பட்டம் பெற்றார். 1547-ல் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் மைக்கேல் கல்லூரியில் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். 1501-ல் வேதசட்டத்தில்* (Canon Law) *முனைவர் பட்டம் பெற்ற அவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக நியமிக்கப்பட்டார். கல்வியில் சிறந்து விளங்கினாலும் கத்தோலிக்க வேத விசுவாசத்தில் உறுதியாயிருந்த அவர் குருத்துவ கடமைகளை மிகவும் பிரமாணிக்கமாக நிறைவேற்றி வந்தார். அவரது பரிசுத்த ஜீவியத்தையும், விசுவாசத்தையும், ஆழ்ந்த அறிவையும் கண்ட இங்கிலாந்து நாட்டின் அரசனான 7-ம் ஹென்றியின் தாய் இராஜமாதா மார்க்கரேட் அவரை தமது ஆன்ம குருவாக ஏற்றுக் கொண்டு, தமது ஞான வாழ்க்கையில் அவரது வழிகாட்டுதலில் தன்னை உட்படுத்தினாள். பின்னர் அப்போது இளவரசனான சிறு வயது 8-ம் ஹென்றிக்கும் ஆசிரியராக செயலாற்றினார்.*

## மேற்றிராணியார்

*இராஜமாதாவின் செல்வாக்கையும், மதிப்பையும் பெற்ற சங். ஃபிஷர் தாம் படித்த கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தின் வளர்ச்சிக்கு அவளது உதவியைப் பெற்றுத் தந்தார். அவரது தூண்டுதலின் பேரிலேயே இங்கிலாந்தின் புகழ் பெற்ற கல்லூரிகளான அர்ச். ஜாண் கல்லூரி மற்றும் கிறீஸ்து கல்லூரி ஆகியவை ஏற்படுத்தப்பட்டன. அவராலேயே கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் கிரேக்கம், ஹீப்ரு மொழி கல்வித் துறைகள் ஏற்படுத்தப்பட்டன. அவர் தமது 45வது வயதில் கிரேக்கத்தையும், 51-வது வயதில் ஹீப்ரு மொழியையும் கற்றுத் தேர்ந்தார் என்பது குறிப்பிடத்தக்கது! அவரது பரிசுத்த வாழ்வையும், கல்வியறிவுத் திறன்களையும் கண்ட அரசர் 7-ம் ஹென்றி அவரை இராச்செஸ்டர் நகரின் மேற்றிராணியராக பாப்பரசரிடம் பரிந்துரைத்து, அதன்படி 1504 அக்டோபர் 14-ம் நாளன்று இராச்செஸ்டர் ஆயராக அபிஷேகம் செய்யப்பட்ட அதே ஆண்டில் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தின் ஆயுட்கால வேந்தராக நியமிக்கப்பட்டார்.*

## விசுவாசத்தின் பாதுகாவலர் !

இந்த சமயத்தில் தான் (1517-ல்) லூத்தரின் புராட்டஸ்டாண்ட் புரட்சி திருச்சபைக்கு எதிராக எழுந்தது. லூத்தர் கத்தோலிக்க திருச்சபையை பிளந்து தமது புராட்டஸ்டாண்டு - எதிர்ப்பு சபையை ஏற்படுத்தினார். இந்த லூத்தரின் தப்பறைகள் - பதிதங்கள் இங்கிலாந்து நாட்டிற்குள் நுழைந்து விடாமல் தடுக்க அரசன் 8-ம் ஹென்றிக்குப் பின்பலமாக செயல்பட்டவர் ஃபிஷர் ஆண்டகையே ! 1521-ல் லூத்தரின் கொள்கையை எதிர்த்து, தேவதிரவிய அனுமானங்களை ஆதரித்து அரசனால் வெளியிடப்பட்ட Assertio Septem Sacramentorum என்ற நூலை எழுதியவர் ஃபிஷர் ஆண்டகையே. அதுவே அரசன் 8-ம் ஹென்றிக்கு "விசுவாசத்தின் பாதுகாவலன்" (Defenor Fidei) என்ற பட்டம் பாப்பரசர் 10-வது சிங்கராயரால் வழங்கக் காரணமாயிற்று மேற்றிராணியார் என்ற பொறுப்பின்படியே லூத்தரின் தப்பறை தமது மேற்றிராசனத்திற்குள், ஏன் இங்கிலாந்து நாட்டிற்குள்ளேயே நுழைந்து விடாதபடி மிகக் கவனமாக இருந்து வந்தார் ஃபிஷர் ஆண்டகை.

## அரசனுக்கு எதிர்ப்பு !

இதுவரையிலும், விசுவாசத்தின் பாதுகாவலனாகப் போற்றப்பட்டு வந்த அரசன் 8-ம் ஹென்றிக்கு பசாசின் சோதனை ஆன்போலின் என்ற பெண்மணியின் வடிவில் வந்து சேர்ந்தது. தமது பட்டத்தரசியான கத்தரீனை விவாகரத்து செய்துவிட்டு, ஆன்போலினை மனைவியாக்கிக் கொள்ள அரசன் விரும்பினான். இப்போது தான் பிரச்சனைகள் வெடிக்கலாயின! கத்தோலிக்கத் திருச்சபையின் மாறாத போதனைக்கு எதிரான விவாக விலக்கு, மறுமணம் பற்றிய அரசனின் முடிவை எதிர்த்த ஃபிஷர் ஆண்டகை, அரசிக்கு ஆதரவாக அவளது சட்ட ஆலோசகராகச் செயல்பட முனைந்தார். அரசியின் சார்பாக அரச நீதிமன்றத்தில் வாதாடி தமது நியாயமான கருத்துக்களாலும், நயமான வார்த்தைகளாலும் எதிர்பாளர்களைத் திகைப்படையச் செய்தார். அரசனை கடுமையாக கண்டித்து பேசியவர், மற்றொரு ஸ்நாபக அருளப்பராகவே திகழ்ந்து அரசியின் நியாயமான - சட்டப்பூர்வமான திருமண உறவை முறிக்க முயலும் அரசனின் செயலைக் கடுமையாகக் கண்டித்தார். இதற்காக தமது உயிரையும் இழக்கவும் தயாராக இருப்பதாக அறிவித்தார்.

ஃபிஷரின் கடுமையான எதிர்ப்பையும், நிலைப்பாட்டையும் அறிந்த அரசன் கடுங்கோபம் கொண்டான், அரசனின் ஏற்பட்டால் "நீண்ட பாராளுமன்றம்" என்பதைக் கூட்டி திருச்சபைக்கு எதிரான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. அதன் மேல் சபை உறுப்பினரான (MP) ஃபிஷர் ஆண்டகை அவைகளை எதிர்த்து எச்சரிக்கை விடுத்தார். அரசனின் இந்த செயல்பாடுகள் இங்கிலாந்து நாட்டில் திருச்சபையின் அழிவுக்கே வழிவகுக்கும் என்று வாதாடினார். அரசனின் ஆதரவு உறுப்பினர்கள் அவனிடம் முறையீடு செய்ய, அரசனும் ஃபிஷரை தம்முன் வரவழைத்து

*விசாரித்தான். தமது சிறுவயது ஆசிரியரும், அரச ஆன்ம குருவுமாகத் திகழ்ந்த ஜான் ஃபிஷர் ஆண்டகையை மிகுந்த ஆசாரத்தோடும், மரியாதையோடும் வரவேற்றான். அரசனை உரிய அந்தஸ்தோடு ஆசிரளித்த ஃபிஷர் தமக்கே உரிய நயமான உறுதியான பேச்சுக்களால் முறிவுபட முடியாத திருமண உறவு பற்றிய திருச்சபையின் சட்டப் போதனைகளை எடுத்து விளக்கிக் கூறிய ஆயர் அவனது உள்ளம் மாற ஜெபித்தவண்ணமிருந்தார். ஆனாலும் ஆங்காரமும் அதனால் எழுந்த ஆசாபாசங்களாலும் ஊறிப் போயிருந்த அரசன் 8-ம் ஹென்றியின் உள்ளம் இளகாது, இருளடைந்து போயிருந்தது. அரசனுடனான ஃபிஷரின் சந்திப்பு தோல்வியில் முடிந்தது.*

*1530-ல் புதிய திருப்பம் ஏற்பட்டது இதுவரை உள்நாட்டிலேயே நிலவிவந்த குழப்பங்கள் ரோமை தலைமை ஸ்தானம் வரை சென்றது. எப்படியெனில், திருச்சபையின் உரிமைகளுக்கும், போதனைகளுக்கும் தொடர்ந்து இடையூறும் மீறுதல்களும், அலட்சியப் போக்கும் நிலவி வந்ததால் ராச்செஸ்டர், பாத், எலி போன்ற மேற்றிராசணங்களின் ஆயர்கள் பாப்பரசரின் அப்போஸ்தலிக்க ஸ்தானத்திடம் முறையீடு செய்தனர். அதில் முதன்மையானவராக திகழ்தவர். ஃபிஷர் ஆண்டகையே ! இதனால் கோபாவேசம் கொண்டு வெகுண்டெழுந்த அரசன் ஆயர்களின் அத்தனை முறையீடல்களுக்கு தடைவிதித்து ஆயர்களை சிறைபிடித்தான். இந்த சிறைவாசம் சில மாதங்களே நீடித்தது. இந்த நிலையில் 1531 பிப்ரவரியில் இங்கிலாந்து பொதுமன்றம்* (House of common) *கூடியது. அதில் இங்கிலாந்து திருச்சபையின் தலைவர் அரசனே என்றும், பாப்பரசரின் அதிகாரம் இங்கிலாந்தில் செல்லாது என்ற தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இதனால் வந்து சேர்ந்தது ஆபத்து !*

*(தொடரும்)*

*- மரியாயே வாழ்க.!*

---

# ஈடேற்றத்தின் அடையாளம்

**“ஒரு வினாடி கூட தயக்கமில்லாமல் நான் கூறுவேன் - மாதாவின் பக்தி முயற்சிகள் அனைத்திலும் அதிக சலுகை பெற்றது உத்தரியமே, நம்முடைய ஈடேற்றத்தை உத்தரியத்தைப் போல் உறுதிப்படுத்துவது வேறெதுவுமில்லை”**

**- அர்ச். கிளாட் தெ லா கொலட்பியர்**

---

# உத்தரியத்தின் சிறப்பு

1251 ஜுலை 16-ம் நாளன்று தேவதாய் அர்ச். சைமன் ஸ்டாக் என்ற கார்மெல் சபை தலைவருக்குத் தோன்றி உத்தரியத்தைக் கொடுத்து **“இவ்வுத்தரியத்தைப் பெற்றுக் கொள். இதை அணிந்து கொண்டு மரிக்கிறவர்கள், நித்திய நெருப்பில் விழமாட்டார்கள். இது ஈடேற்றத்தின் ஒரு அடையாளம். ஆபத்தில் ஒரு பாதுகாப்பு சமாதானத்தின் பிணை”** என்று **கூறினார்கள்.**



# மாதாவின் சூசை அச்சக புத்தக டிப்போவில் கிடைக்கும் ஞானப் புத்தகங்கள்



PH : 0461 -2361989

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 1. | பாரம்பரிய திருக்குடும்ப பக்திமாலை | 220.00 | 260.00 |
| 2. | உலகின் இறுதிக்காலங்கள் | 125.00 | 140.00 |
| 3. | திருப்பாடுகளின் வரலாறு | 120.00 | 125.00 |
| 4. | அனுதின ஜெபப் புத்தகம் | 50.00 | 60.00 |
| 5. | திருப்பாடுகளின் தியானம் | 90.00 | 100.00 |
| 6. | அறிவோம் பத்துக்கட்டளைகளை | 100.00 | 110.00 |
| 7. | மலைமேல் பிரசங்கம் | 65.00 | 70.00 |
| 8. | அறிவோம் அப்போஸ்தலர்களை; அர்ச். பிலவேந்திரர் | 90.00 | 100.00 |
| 9. | ஞான உபதேசக் கோர்வை (3 பாகங்கள்) | 325.00 | 350.00 |
| 10. | மன்ரேசா (அர்ச். இஞ்ஞாசியாரின் தியானப் பிரசங்கங்களின் தொகுப்பு) | 125.00 | 140.00 |
| 11. | கிறீஸ்துநாதர் அநுசாரம் | 150.00 | 160.00 |
| 12. | மரியாயின் மீது உண்மை பக்தி | 125.00 | 140.00 |
| 13. | பாத்திமா காட்சிகள் | 100.00 | 110.00 |
| 14. | பாவசங்கீர்த்தனத்தின் இரகசியம் | 60.00 | 70.00 |
| 15. | சேசுவின் திருநாமத்தின் அதிசயங்கள் | 35.00 | 40.00 |
| 16. | கற்பு என் பொக்கிஷம் | 60.00 | 70.00 |
| 17. | என்னைப் படி அல்லது வருத்தப்பட்டு (உத்தரிக்கிற ஆன்மாக்கள் பற்றியது) | 30.00 | 35.00 |
| 18. | ஞான உணர்த்துதல் | 40.00 | 45.00 |
| 19. | Read Me or Rue It | 60.00 | 70.00 |
| 20. | என்னைப் படிக்காவிட்டால் நீ வருத்தப்படுவாய் | 75.00 | 80.00 |
| 21. | கத்தோலிக்க வேத சத்தியங்கங்கள் | 45.00 | 50.00 |
| 22. | இதுதான் பாத்திமா செய்தி, இதுவே பரிகார பக்தி | 35.00 | 40.00 |
| 23. | ஞான சரீரம் | 35.00 | 40.00 |
| 24. | சலேத் இரகசியம் | 35.00 | 40.00 |
| 25. | மரியாயின் இரகசியம் | 30.00 | 35.00 |
| 26. | தேவ இரகசிய ரோஜா மாதா காட்சிகள் | 30.00 | 35.00 |
| 27. | The Penny Catechism | 35.00 | 40.00 |
| 28. | அமலோற்பவ மாமரியின் போரணி | 40.00 | 45.00 |
| 29. | அன்னையை நேசிக்க பன்னிரு படிகள் | 30.00 | 35.00 |
| 30. | மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்தி முயற்சிகள் | 25.00 | 30.00 |
| 31. | முத்துக்குளித் துறையின் முதல் ஆயர் (வந். ரோச் ஆண்டகையின் வரலாறு) | 30.00 | 35.00 |
| 32. | மோட்சம், நரகம், உத்தரிக்கிற ஸ்தலம் | 35.00 | 40.00 |
| 33. | வியாகுல மாதா பக்தி | 35.00 | 40.00 |
| 34. | தலைவெள்ளி, முதல் சனி பக்தியும், ஜெபமாலையும் அனுசரிக்கும் முறை | 20.00 | 25.00 |
| 35. | உத்தரிக்கிற ஸ்தலத்துக்கு அனுதின யாத்திரை | 12.00 | 15.00 |
| 36. | காவல் சம்மனசானவர் | 10.00 | 10.00 |
| 37. | சிலுவைப்பாதை | 15.00 | 1500 |
| 38. | பரிசுத்த ஆவி ஜெபம் | 6.00 | 7.00 |
| 39. | சேசுவின் திரு இருதய மந்திரமாலை | 6.00 | 7.00 |
| 40. | தேவமாதாவின் மந்திரமாலை | 10.00 | 12.00 |
| 41. | அர்ச். சூசையப்பர் பக்திமாலை | 10.00 | 12.00 |
| 42. | அர்ச். சூசையப்பரின் மாந்தை நவநாள் | 8.00 | 12.00 |
| 43. | ஆதித் திருச்சபையின் பத்து வேதகலாபனைகள் | 10.00 | 12.00 |
| 44. | திருச்சபையின் கட்டளைகள் | 10.00 | 12.00 |
| 45. | சேசுவின் இரக்க பக்தி | 10.00 | 12.00 |
| 46. | அர்ச். பிலோமினம்மாள் ஜெபப் புத்தகம் | 10.00 | 12.00 |
| 47. | தேவ அழைத்தல்கள் | 35.00 | 40.00 |
| 48. | சின்னக் குறிப்பிடம் | 10.00 | 12.00 |

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 49. | அன்பிரவு (பரிகாரத் திருமணி ஜெபப் புத்தகம்) | 25.00 | 30.00 |
| 50. | மனச்செபம் ஒரு விளக்கம் | 35.00 | 40.00 |
| 51. | புதுநன்மைப் புனிதை (முத்திப்பேறு பெற்ற இமெல்டா வாழ்க்கை வரலாறு) | 70.00 | 75.00 |
| 52. | பரலோக எச்சரிப்பு (2 புத்தகங்களின் தொகுப்பு - அந்தோனி சேவியர்) | 60.00 | 65.00 |
| 53. | ஜெபமாலையின் இரகசியம் (அர்ச். லூயிஸ் மோன்போர்ட் எழுதியது) | 80.00 | 90.00 |
| 54. | மரியாயின் மாசற்ற இருதய வெற்றியின் உதயம் | 35.00 | 40.00 |
| 55. | 33 நாள் தயாரிப்பு: தேவமாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் முறை (தியானங்களுடன்) | 50.00 | 60.00 |
| 56. | இறுதிக்கால யுகம் | 100.00 | 115.00 |
| 57. | அர்ச். பத்தாம் பத்திநாதர் வாழ்க்கை வரலாறு | 100.00 | 115.00 |
| 58. | புதுமைப் புனிதர் தந்தை பியோ | 200.00 | 220.00 |
| 59. | வேத விளக்கம் : ஆசிரியர் : வீரமாமுனிவர் (சங். ஜோசப் பெஸ்கி, சே.ச.) | 150.00 | 160.00 |
| 60. | அன்பின் அரசர் | 150.00 | 160.00 |
| 61. | நரகம் | 60.00 | 65.00 |
| 62. | அர்ச். ரீத்தம்மாளின் ஜீவிய சரித்திரம் | 12.00 | 15.00 |
| 63. | தேவமாதாவின் பிரார்த்தனை விளக்கம் | 150.00 | 160.00 |
| 64. | புதிய நட்சத்திரம் பிலோமினா | 60.00 | 65.00 |
| 65. | அர்ச். பாஸி மரிய மதலேனாள் | 85.00 | 90.00 |
| 66. | அர்ச். ஜெர்த்ரூத்தம்மாள் | 45.00 | 50.00 |
| 67. | ஜெபமாலை ஜெபிப்பது எப்படி? | 10.00 | 12.00 |
| 68. | A Brief History of St. Mary Magdalene de Pazzi, Carmelite and Mystic | 50.00 | 55.00 |

## ஜூலை - ஆகஸ்டு மாதங்களின் முதல் சனி பக்தி முயற்சியின் பரிகாரக் கருத்துகள்

**ஜூலை :** மாதாவின் அமல உற்பவத்துக்கு எதிராகச் செய்யப்படும் நிந்தைகளுக்குப் பரிகாரமாக.

**ஆகஸ்டு :** மாதாவின் தெய்வீகத் தாய்மைக்கு எதிராகச் செய்யப்படும் நிந்தைக்குப் பரிகாரமாக.

## அன்பான வாசகர்களின் கவனத்திற்கு

1. மணியார்டர் பாரத்தில் உங்கள் தொலைபேசி / அலைபேசி எண்ணைக் குறிப்பிடுங்கள்.
2. மாதா பரிகார மலரை உங்களுக்குத் தெரிந்தவர்கள், உறவினர்கள், நண்பர்களுக்கு அறிமுகப்படுத்தி பரப்ப உதவுங்கள். (எங்களுக்கு உதவி செய்கிற உங்கள் அனைவரின் ஆன்ம சரீர நலன்களுக்காகவும் தினமும் எங்கள் ஜெபத்தில் வேண்டுகிறோம்.)
3. மாதா பரிகார மலர் ஆண்டு சந்தாவை இன்னும் புதுப்பிக்காதவர்கள் உடனே அதைப் புதுப்பித்து நம் பத்திரிகை நல்ல முறையில் வெளிவர எங்களுக்கு உதவும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். வருட சந்தா - ரூ. 150/லி கூடுதல் தபால் செலவு ஆகிறது. நேயர்கள் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.
4. மாதா பரிகார மலர் சாந்தா, காணிக்கை மற்றும் புத்தகங்களுக்கு மட்டும் கீழ்கண்ட பெயரில் உங்கள் மணியார்டர்கள், உ.உ.ள். மற்றும் காசோலைகளை அனுப்புங்கள்.

A/c Name : SOCIETY OF APOSTLES OF MARY
No. 31423199505 - IFS Code : SBIN 0008145
State Bank of India, Kanthasamypuram Branch. Tuticorin

**அனுப்ப வேண்டிய முகவரி :**
மாதா அப்போஸ்தலர்கள் சபை,
ரோஸா மிஸ்திக்கா,
11/519 சகாயமாதா பட்டணம், 2-வது தெரு, வி.வி.டி மேல்நிலைப் பள்ளி எதிரில், தூத்துக்குடி - 628002.
போன் : 0461 2361989, அலைபேசி : 9487609983. Email : tutirosamystica@gmail.com

சந்தா, நன்கொடை செலுத்த :
Google Pay **9487609983**

# உலக ஜெயராக்கினி சகாயமாதா ஆலயம்



கட்டப்பட இருக்கும் ஆலயத்தின் தோற்றம்



ஆலயத்தின் தற்போதைய கட்டுமான தோற்றம்

பாத்திமாவில் தேவ மாதா கேட்டுக் கொண்டுள்ளபடி மரியாயின் மாசற்ற இருதய பரிகாரப் பக்தியை (முதல் சனி பக்தி) கடைப்பிடித்து பரப்புவதும், மரியாயின்மீது உண்மையான பக்தியை பரப்புவதும், அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட் முறைப்படி மாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் பொருட்டு 33 நாள் தயாரிப்பைக் கடைப்பிடிக்கச் செய்து மாதா அப்போஸ்தலர்களை ஏற்படுத்துவதும், சேசுவின் திரு இருதய பக்தியை (தலைவெள்ளி பக்தி) பரப்பவும், ஜெபமாலை மற்றும் உத்தரியத்தின் மீதான பக்தியைப் பரப்பவும், ஜெபத்தையும், தவத்தையும், பரிகாரத்தையும் மக்கள் கடைப்பிடித்து வாழச் செய்வதையும், நல்ல கத்தோலிக்க புத்தகங்களை வெளியிட்டு, ஞான உபதேச அறிவையும், விசுவாசத்தையும், தேவ சிநேகத்தையும் வளர்ப்பதும் எங்கள் சபையின் நோக்கமாகும்.

**ஆலயத்தை கட்டி முடிக்க தேவையான தொகை ₹ 53,50,000/-** (535 x ₹10,000/-
1070 x ₹ 5,000) =₹ 53,50,000/-
**ஒரு சதுர அடி ₹ 2800/-**
**மொத்த சதுர அடி (Sq. ft.) 4200** **தங்களது உதவியை வேண்டுகிறோம்.**

**முகவரி**
மாதா அப்போஸ்தலர்கள் சபை,
(Society of Apostles of Mary)
**11/519,** சகாயமாதாபட்டணம், தூத்துக்குடி,
தொலைபேசி: **0461 2361989** அலைபேசி: **94876 09983**
E-mail: tutirosamystica@gmail.com

**வங்கி விபரம்**
**Account Name: Society of Apostles of Mary**
**Account No. 121802000000473**
**IFS Code: IOBA0001218**
**Indian Overseas Bank,**
**Mappilaiyurani Branch, Thoothukudi.**



# அர்ச். சாமிநாதரை நோக்கி ஜெபம்!

அர்ச். சாமிநாதரே, உமது மரணத்தின்போது, உம்மைப் பற்றி அழுது புலம்பியவர்களுக்கு அதிசயத்துக்குரிய நம்பிக்கையளித்தீரே. நீர் இறந்த பிறகு உம்முடைய துறவியர்களுக்கு இன்னும் அதிக உதவியாயிருப்பதாக வாக்களித்தீரே, ஓ, எங்கள் நல்ல தகப்பனே, உமது வாக்குறுதியை நிறைவேற்றி, உமது மன்றாட்டால் எங்களுக்கு உதவி செய்வீராக.

உடலில் நோயாயிருந்தவர்களை குணப்படுத்தி அநேகப் புதுமைகள் செய்து பிரகாசித்தவரே, நோயாயிருக்கும் எங்கள் ஆத்துமங்களைக் குணப்படுத்த கிறிஸ்து நாதருடைய உதவியை எங்களுக்குப் பெற்றுத் தருவீராக. ஓ, எங்கள் நல்ல தகப்பனே, உமது வாக்குறுதியை நிறைவேற்றி, உமது மன்றாட்டால் எங்களுக்கு உதவி செய்வீராக.

**அர்ச். சாமிநாதர் திருநாள் : ஆகஸ்ட் – 4**

மாதா பரிகார மலரில் விசுவாசத்திற்கோ, நல்லொழுக்கத்திற்கோ, கத்தோலிக்க திருச்சபைக்கோ அதன் போதனைகளுக்கோ உண்மையான பக்திக்கோ மாறுபாடான எந்தக் கருத்தும் வெளிவராது.

– மாதா பரிகார மலர் குழு


**MATHA PARIKARA MALAR**
**ROSA MYSTICA**
**(Opp. V.V.D. H. Sec. School)**
**SAHAYAMATHAPATTANAM**
**TUTICORIN - 628 002.**
**PH: 0461 - 2361989**
E-mail: tutirosamystica@gmail.com

மாதா பரிகார மலர்
ரோஸா மிஸ்திக்கா
வி.வி.டி. மேல்நிலைப்பள்ளி எதிரில்,
சகாயமாதாபட்டணம்
தூத்துக்குடி மேலூர் போஸ்ட் – 628 002
போன்: 0461 – 2361989


To


Printed, Published and owned by: S. Michael Joseph Kennedy , Managing Trustee cum Secretary of Society of Apostles of Mary & Keeper of Mathavin Susai Achagam (Printing Press), 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin District, Tamil Nadu.

Printed at: Mathavin Susai Achagam (Printing Press), C/o, Society of Apostles of Mary, D.No 11/510, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.

Published at: Society of Apostles of Mary, 11/510-1, Rosamystica 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.

Editor: Sammanasu Francis, C/o, Society of Apostles of Mary, 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamilnadu.